உ

ஸ்ரீ ராம ஜெயம் | ஸ்ரீ அங்காள அம்மன் துணை | ஸ்ரீ வாசவி அம்மன் துணை

சுவாமி ஸ்ரீ தண்டாயுதபாணி துணை



மங்களே மங்களா தாரே மாங்கல்யே மங்களப்ரதே மங்களார்த்தம்
மங்களேஸி மாங்கல்யம் தேஹிமே ஸதா



# உபநயன, திருமண சுபமுகூர்த்த பத்திரிகை

ஸ்வஸ்தி ஸ்ரீ நிகழும் மங்களகரமான மன்மத வருஷம் தை மாதம் 20ம் நாள் (3-2-2016) புதன்கிழமை க்ருஷ்ண பக்ஷ தசமி திதி, அனுஷ நக்ஷத்ரம், சித்தயோகம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 9.00 மணிக்கு மேல் 9.50 மணிக்குள் மீன லக்னத்தில்

பழநி R. பாலசந்திரன் செட்டியார் - இந்திரா அம்மாள் பௌத்திரியும், எங்களது கனிஷ்ட குமாரத்தியுமான சௌபாக்யவதி

**K. ரம்யா** B.Tech.

என்கிற கன்னிகையை

ஆனைமலை K. அசோக்குமார் செட்டியார் - A. சாந்தி அவர்களின் குமாரன்

சிரஞ்ஜீவி **A. வருண்**

B.Tech.. MBA.

என்ற வரனுக்கு

சாலங்கிருத கன்னிகாதானம் செய்து கொடுப்பதாக, பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு, மேற்படி சுபமுகூர்த்தம் பழநி அடிவாரம், அருள்ஜோதி வீதி, **அங்காள ஈஸ்வரி திருமண மண்டபத்தில்** நடைபெற இருப்பதால் தாங்கள் சுற்றமும் நட்பும் சூழ வருகை தந்து மேற்படி சுபமுகூர்த்தத்தை நடத்தி கொடுத்து தம்பதிகளை ஆசீர்வதிக்க வேணுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

தங்கள் நல்வரவை விரும்பும் :

**R. விஷ்ணுவர்த்தன்**

**V. ஜெயலக்ஷ்மி**



இப்படிக்கு

**B. கண்ணன்**

**K. லதா கண்ணன்**

**கமலேஸ் ஜுவல்லரி, பழநி**



உ

# திருமண மலர்



## சமர்ப்பணம்

**மங்களே மங்களா தாரே மாங்கல்யே மங்களப்ரதே மங்களார்த்தம்**
**மங்களேஸி மாங்கல்யம் தேஹிமே ஸதா**

இத்திருமண மலரில் பல்வேறு புராணங்கள், தொகுப்புகள் மற்றும் சில அபூர்வமான மந்திரங்கள், மன அழுத்தம், கோபம், துக்கம், துயரம் முதலியவற்றிலிருந்து விடுபடவும், மனித நேயத்தோடு இருப்பதற்கும் உதவக்கூடியது ஆகும்.

நம்பிக்கையுடன் தேவைக்கேற்றதை ஜபித்து வந்தால் எல்லாம் வல்ல இறைவன் அருளால் வேண்டியது கிடைக்கும்.

எனது குருஜியும் ஸதா ஸர்வ காலமும் விஷ்ணு ஸஹஸ்ர நாமாவை ஜபிப்பவரும் ஆன **பிரம்மஸ்ரீ A.V. ஜெயராமன்** (President, All India Vishnu Sahasranama Committee) அவர்களால் வெளியிடப் படும் இந்த மலர் மூலம் இந்த திருமண தம்பதிகளுக்கும், அவர்கள் குடும்பத்தாருக்கும், இந்த விழாவிற்கு வருகை தந்தவர்களுக்கும், இந்த புத்தகத்தை படிப்பவர்களுக்கும் எல்லாம் வல்ல இறைவனின் பரிபூரண அருள் கிடைக்க வேண்டுவது ...

**S. சுப்பிரமணியன்**

குருவருள்! திருவருள்!!

ஶ்ரீ குரு ஸ்துதி

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணுர் குருர் தேவோ மஹேச்வர:
குரு: ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம தஸ்மை ஶ்ரீகுருவே நம:

குருவே ஸர்வ லோகானாம் பிஷஜே பவரோகிணாம்
நிதயே ஸர்வ வித்யானாம் தக்ஷிணாமூர்த்தயே நம:

# ஶ்ரீ கணேச பஞ்சரத்னம்

முதா3 கராத்தமோத3க1ம் ஸதா3 விமுக்தி ஸாதக4ம்
கலாத4ராவதம்ஸகம் விலாஸிலோகரக்ஷகம் ।
அநாயகைகநாயகம் விநாசிதேப4தை3த்யகம்
நதாசுபாசு4நாசகம் நமாமி தம் விநாயகம் ॥

சந்தோஷத்துடன் கையில் மோதகத்தை (கொழுக் கட்டையை) வைத்துக் கொண்டிருப்பவரும், தம்மைப் பூஜிப்பவர்களுக்கு எப்பொழுதும் மோக்ஷத்தைக் கொடுப் பவரும், சந்திர கலையைத் தலையில் தரிப்பவரும், (தம்முடைய சரித்திரத்தைப் பாடிக்கொண்டு) ஆனந்தமாக இருக்கும் பக்தர்களை ரக்ஷிப்பவரும், நாதனில்லாத ஜனங்களுக்கு ஆபத்துக் காலத்தில் தாமே நாதராக இருந்து காப்பாற்றுபவரும், கஜாஸுரனைக் கொன்றவரும், தம்மை வணங்கும் ஜனங்களுடைய பாவங்களை உடனே நாசம் செய்பவருமான மஹா கணபதியை வணங்குகிறேன்.

நதேதராதிபீ4கரம் நவோதி3தார்க்கபா4ஸ்வரம்
நமத்ஸுராரிநிர்ஜரம் நதாதி4காபது3த்3த4ரம் ।

ஸுரேச்வரம் நிதீ4ச்வரம் க3ஜேச்வரம் க3ணேச்வரம்

மஹேச்வரம் ஸமாச்ரயே பராத்பரம் நிரந்தரம் ||

தம்மை வணங்காதவர்களுக்கு பயத்தைக் கொடுத்துச் சிக்ஷிப்பவராயும்,உதய காந்த சூரியனைப் போல் விளங்கு பவராயும், தம்மை வணங்குகிற தேவர்களின் சத்துருக்களான அஸுரர்களை ஒழிக்கிறவராயும், தம்மை நமஸ்கரிப்பவர் களைப் பெரியஆபத்திலிருந்து கைதூக்கி விடுபவராயும், தேவர்களின் அதிபதியாயும், புதையல் சொத்துக்களுக்கு அதிதேவதையாயும் (பக்தர்களுக்குப் புதையல்களைக் கொடுப் பவராயும்), யானைகளுக்கு அதிபதியாயும், சண்டிகேச்வரர் முதலிய பிரதம கணங்களுக்கு நாதராயும், ஈச்வரனுக்கும் மேலானவராயும், உலகுக்கு மூலகாரணமானதால் மேலானது (பரம்) என்று சொல்லப்படும் மாயையைக் காட்டிலும் மேலானவராயும் (மாயா ஸம்பந்தமற்றவராயும்) விளங்கும் மஹா கணபதியை இடைவிடாமல் வணங்குகிறேன்.

ஸமஸ்தலோகசங்கரம் நிரஸ்ததை3த்யகுஞ்சரம்

த3ரேதரோத3ரம் வரம் வரேப4வக்த்ரமக்ஷரம் |

க்ருபாகரம் க்ஷமாகரம் முதா4கரம் யசஸ்கரம்

மநஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்கரோமி பாஸ்வரம் ||

பதினான்கு உலகங்களிலுமுள்ள ஜனங்களுக்குச் சுகத்தைக் கொடுப்பவரும், கஜாஸுரனை ஸம்ஹாரம் செய்தவரும், (ஸகல உலகங்களையும் வயிற்றுக்குள் வைத்துக் கொண்டு ரக்ஷிக்கிறவராதலால்), பெருத்த வயிற்றுடன் கூடியவரும், சிரேஷ்டரும், உயர்ந்த யானையான

ஐராவதத்தின் முகத்தைப் போன்ற முகத்துடன் கூடியவரும், அழிவற்றவரும், தம்மை வணங்குபவர்கள் என்ன அபசாரம் செய்திருந்தாலும் அதைப் பொறுத்துக் கொண்டு அவர்களிடம் கிருபை கொண்டு அவர்களின் மனத்தை நல்வழியில் திருப்பி அவர்களுக்குச் சந்தோஷத்தையும், நல்ல கீர்த்தியையும் உண்டு பண்ணுகிறவருமான ஒளி மிகுந்த மஹா கணபதியை வணங்குகிறேன்.

**அகிஞ்சநார்த்திமார்ஜநம் சிரந்தநோக்திபா4ஜநம்**
**புராரிபூர்வநந்த3நம் ஸுராரிக3ர்வசர்வணம் ।**
**ப்ரபஞ்சநாசபீ4ஷணம் த4நஞ்ஜயாதி3பூ4ஷணம்**
**கபோலதா3நவாரணம் ப4ஜே புராணவாரணம் ॥**

தம்மைப் பூஜிப்பவர்களின் தாரித்திரியப் பீடையை நாசம் செய்கிறவரும்,அநாதியான வேத வாக்கியங்களால் துதிக்கப் பெறும் மகிமையுள்ளவரும், திரிபுர ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனுடையமூத்த புத்திரரும், தேவ சத்துருக்களான அஸுரர்களின் கர்வத்தை அடக்குபவரும், லோகங்களை நாசம் செய்கிற யமனுக்கும் பயத்தைக் கொடுப்பவரும், (தம் பக்தர்களிடம் யமனை அண்டவிடாமல் தடுப்பவரும்) அர்ஜுனன் முதலிய வில்லாளராலும் (காரியாரம்பத்தில்) பூஜிக்கப் பெற்றவரும், கன்னப் பிரதேசத்தில் ஏற்படும் மத ஜலத்தைப் பெருக விடுபவரும், பிராதன கஜஸ்வரூபியான மஹா கணபதியை வணங்குகிறேன்.

**நிதாந்த காந்த3தந்தகாந்தம் அந்தகாந்தகாத்மஜம்**
**அசிந்த்யரூப - மந்தஹீநம் அந்தராயக்ருந்தநம் ।**

ஹ்ருத$^3$ந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்
தமேகத$^3$ந்தமேவ தம் விசிந்தயாமி ஸந்ததம் ||

மிகவும் அழகான தந்தத்தின் சோபையுடன் கூடியவரும், யமனுக்கும் யமனான பரமேச்வரனுடைய புத்திரரும், மனத்தாலும் சிந்திக்க முடியாத ஸ்வரூபத்தை உடையவரும், நாசமற்றவரும், விக்கினங்களை நாசம் செய்கிறவரும், யோகிகளின் ஹ்ருதயத்தில் எப்பொழுதும் வசிப்பவரும், ஒரே தந்தத்துடன் கூடியவருமான மஹா கணபதி ஒருவரையே எப்போதும் தியானிக்கிறேன். (வியாஸாசார்யர் சொன்ன மஹா பாரதத்தை எழுதுவதற்காக விநாயகர் ஒரு தந்தத்தையே ஒடித்து எழுதுகோலாக உபயோகித்தார் என்பது புராண வரலாறு).

மஹாக$^3$ணேச பஞ்சரத்நம் ஆத$^3$ரேண யோந்வஹம்
ப்ரஜல்பதி ப்ரபா$^4$தகே ஹ்ருதி$^3$ ஸ்மரந் க$^3$ணேச்வரம் |
அரோக$^3$தாம் அதோ$^3$ஷதாம் ஸுஸாஹிதீம் ஸுபுத்ரதாம்
ஸமாஹிதாயுரஷ்டபூ$^4$திமப்யுபைதி ஸோசிராத் ||

"மஹா கணபதி பஞ்சரத்னம்" என்னும் இந்த ஸ்தோத்திரத்தை எவர் ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் மஹா கணபதியை இதயத்தில் தியானித்துக் கொண்டு பாராயணம் செய்கிறார்களோ, அவர்கள் சீக்கிரமாகவே எல்லா ரோகங்களிலிருந்தும், எல்லா தோஷங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். அவர்கள் நல்ல கவிதா சக்தியையும், உத்தம புத்திரர்களையும், நீண்ட ஆயுளையும், அஷ்ட ஐசுவரியங்களையும் அடைவார்கள்.

- ஸ்ரீ கணேச பஞ்சரத்னம் ஸம்பூர்ணம் -

# ஸ்ரீ கணேச புஜங்கம்

ரணத் க்ஷுத்3ர க4ண்டா நிநாதா3பி4ராமம்
சலத்தாண்ட3வோத்3த3ண்ட3 பத்பத்3ம தாளம் ।
லஸத் துந்தி3லாங்கோ3 பரிவ்யாளஹாரம்
க3ணாதீ4சமீசான ஸூநும் தமீடே3 ।।

இனிமையாக சப்திக்கும் சிறிய மணிகளின் சப்தத்தால் மகிழ்ச்சியடைபவரும், தாண்டவமாடும்போது நிமிர்ந்ததும் அசைவதுமான திருவடித் தாமரையினால் தாளம் போடு பவரும், உதரத்தின்மீது பிரகாசிக்கும் ஸர்ப்ப ஹாரத்தை உடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

த்4வனி த்4வம்ஸ வீணா லயோல்லாஸிவக்த்ரம்
ஸ்புரச் சுண்ட3 த3ண்டோ3ல்லஸத்3பீ3ஜபூரம் ।
கலத்3 த3ர்ப்ப ஸௌக3ந்த்4ய லோலாலி மாலம்
க3ணாதீ4சமீசான ஸூநும் தமீடே3 ।।

வீணாகானம் முடிந்த பிறகு மனத்துள் அந்த ரஸத்தை அனுபவித்து லயித்திருப்பதால் பிரகாசிக்கும் முகத்தை உடையவரும், துதிக்கையில் விளங்கும் கொய்யாப்பழத்தை (அல்லது மாதுளம்பழத்தை) உடையவரும், பெருகும் மத ஜலத்தில் ஆசையினால் சுற்றும் வண்டுகளின் வரிசையை உடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

ப்ரகாசஜ் - ஜபாரக்த ரத்னப்ரஸூன
ப்ரவாள ப்ரபா4தாருண ஜ்யோதிரேகம் ।

ப்ரலம்போ3த3ரம் வக்ர துண்டை3கத3ந்தம்
கணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ||

நன்கு பிரகாசிக்கும் செம்பருத்தி மலர், சிவந்த ரத்னம், சிவந்த புஷ்பம், பவழம், இளம் சூர்யன் இவைகளினது போன்ற காந்தியை உடையவரும், பருத்த வயிற்றை உடையவரும், வளைந்த துதிக்கை, ஒற்றைத் தந்தம் இவற்றை உடையவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

விசித்ரஸ்புரத்3 ரத்ன மாலாகிரீடம்
கிரீடோல்லஸச் - சந்த்ர ரேகா2 விபூ4ஷம் |
விபூ4ஷைகபூ4ஷம் ப4வத்4வம்ஸ ஹேதும்
க3ணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ||

பல நிறமுள்ளவைகளும், ப்ரகாசிக்கிறவைகளுமான ரத்னங்கள் பதித்த ஹாரம், கிரீடம் இவற்றை உடையவரும், கிரீடத்தின் மீது விளங்கும் சந்திரகலையாகிய ஆபரணத்தை உடையவரும், ஆபரணங்களுக்கெல்லாம் முக்கியமான ஆபரணமாக விளங்குபவரும், ஸம்ஸார பந்தம் நீங்கு வதற்குக் காரணமாக இருப்பவரும், பரமேச்வரனின் புத்ரருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

உத3ஞ்சத்3 - பு4ஜாவல்லரீ த்3ருச்ய மூலோல் -
லஸத்3 ப்4ரூலதாவிப்4ரமப்4ராஜ த3க்ஷம் |
மருத்ஸுந்த3ரீ சாமரை: ஸேவ்யமானம்
க3ணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ||

உயரே நிமிர்த்தப்பட்ட கொடி போன்ற அழகிய

கைகளையும், ஓரங்களில் அழகாக விளங்கும் புருவங்களின் விலாஸங்களால் சோபிக்கும் கண்களையும் உடையவரும், தேவ ஸ்திரீகளால் வெண்சாமரங்களைக் கொண்டு ஸேவிக்கப்படுபவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**ஸ்புரந்நிஷ்டு2ராலோல பிங்கா3க்ஷிதாரம்**
**க்ருபா கோமளோதா3ர லீலாவதாரம் ।**
**கலா பி3ந்து3க3ம் கீ3யதே யோகி3வர்யை:**
**க3ணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ।।**

ப்ரகாசிப்பதாயும் கம்பீரமாயும் சஞ்சலமாயும் சிவந்ததாயுமுள்ள கண் பார்வையை உடையவரும், கருணையினால் அழகியதும் கபடமற்றதுமான லீலைகளோடு கூடிய அவதாரத்தை உடையவரும், சிறந்த யோகிகளால் கலா, பிந்து என்ற ஸ்தானங்களை அடைந்தவராகக் கூறப்படுபவரும், பரமேச்வரனின் புதல்வருமான ஸ்ரீ கணேசரைத் துதிக்கிறேன்.

**யமேகாக்ஷரம் நிர்மலம் நிர்விகல்பம்**
**கு3ணாதீதம் ஆனந்த3ம் ஆகார சூன்யம் ।**
**பரம் பாரம் ஓங்காரம் ஆம்னாய க3ர்ப4ம்**
**க3ணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ।।**

எவரை மஹான்கள், ஒன்றான அழிவற்றதாயும், நிர்மலமானதாயும், பேதமற்றதாயும், குணங்களுக்கு அப்பாற்பட்டதாயும் (நிர்க்குணமாயும்), ஆனந்த ஸ்வருபமாயும், உருவமற்றதாயும், எல்லாவற்றிற்கும் மேலானதாயும், ஓங்கார (ப்ரணவ)

ஸ்வரூபமாயும், வேதங்களின் உட் பொருளாயும், சுலபமாக அறிய முடியாததாயும், அனாதியாயும் கூறுகின்றனரோ அத்தகைய கணேசரைத் துதிக்கிறேன்.

**சிதா3னந்த3 ஸாந்த்3ராய சாந்தாய துப்4யம்**
**நமோ விச்வகர்த்ரே ச ஹர்த்ரேச துப்4யம் ।**
**நமோ (அ)னந்த லீலாய கைவல்ய பா4ஸே**
**க3ணாதீ4சமீசான ஸூனும் தமீடே3 ॥**

பரிபூரண ஞான ஆனந்த ஸ்வருபியும், சாந்த ஸ்வரூபியும், உலகைப் படைப்பவரும் அழிப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம். உலகிற்குக் காரணமாக விளங்கும் ஹே ஈச புத்ரா! எல்லையற்ற லீலைகளைப் புரிகின்ற ஒளி வடிவமான கைவல்ய நிலையிலுள்ள தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் அருள்புரிய வேண்டும்.

**இமம் ஸுஸ்தவம் ப்ராதருத்தா3யப4க்த்யா**
**படே3த்3யஸ்து மர்த்யோ லபே4த்ஸர்வகாமான் ।**
**க3ணேசப்ரஸாதே3ன ஸித்4யந்தி வாசோ**
**க3ணேசே விபெ3ள துர்லப4ம் கிம் ப்ரஸன்னே ॥**

எந்த மனிதன் அழகிய இந்த ஸ்தோத்ரத்தைக் காலையில் எழுந்து பக்தியுடன் படிக்கிறானோ, அவன் எல்லா விருப்பங்களையும் அடைவான். ஸ்ரீ கணேசரின் அருளால் அவனது சொல் பயனளிக்கக் கூடியதாகும். ஸர்வ வ்யாபியான ஸ்ரீ மஹா கணபதி ஸந்தோஷமடைந்தால் எதைத்தான் அடைய முடியாது! (எல்லாவற்றையும் பெறலாம்).

# ஸ்ரீ விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தாமரைப் பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன் அரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்து அழகு எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்

வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்
நான்றவாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும் மதச் சுவடும்

இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழ் ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!

இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத்தான் எழுந்து அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்தே
திருந்திய முதல் ஐந்து எழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்து என் உளந்தனில் புகுந்து

குரு வடிவாகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத் திறம் இது பொருள் என
வாடா வகைதான் மகிழ்ந்து எனக்கு அருளிக்
கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டி என் செவியில்

தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிது எனக்கு அருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்து இருள் கடிந்து

தனம் ஒரு நான்கும் தந்து எனக்கு அருளி
மனம் ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி
ஆறாதாரத்து அங்கிசை நிலையும்

பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடை பிங்கலையின் எழுத்து அறிவித்துக்
கடையில் கழுமுனைக் கபாலமும் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்று எழு பாம்பின் நாவில் உணர்த்திக்

குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டு எழு மந்திரம் வெளிப்பட உரைத்து

மூலா தாரத்தின் மூண்டு எழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்து அறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடல் சக்கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முகம் ஆக இனிது எனக்கு அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிது எனக்கு அருளி
என்னை அறிவித்து எனக்கு அருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டிற்கும் ஒன்று இடம் என்ன
அருள் தரும் ஆனந்தத்து அழுத்தி என் செவியில்
எல்லையில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள் வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்

சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடு மெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும் பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தின் நிலை அறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்து எனை ஆண்ட
வித்தக விநாயக விரை கழல் சரணே!

(வாக்கு உண்டாகும், லக்ஷ்மீ கடாக்ஷம் உண்டாகும், வெவ்வினைகள் தீரும்)

---

ஓம் ஸ்ரீ குமார குருப்யோ நமோ நம:

## ஸ்ரீ ஷண்முக ஸ்தோத்ரம்

## (வறுமையை நீக்கி, செல்வ ஸுகம் தரவல்லது)

1. அபாரே அதி தாரித்ர்ய பாதோதி மத்யே ப்ரமந்தம் ஜனிக்ராஹ பூர்ணே நிதாந்தம்:
மஹாஸேன மாமுத்தர த்வம் கடாக்ஷா வலோகேன கிஞ்சித் ப்ரஸீத ப்ரஸீத

2. ப்ரதாபஸ்ய பாஹோ நமத் வீர பாஹோ ப்ரபோ கார்த்திகேயேஷ்ட காமப்ரதேதி
யதா யே படந்தே பவந்தம் ததைவ
ப்ரஸன்னஸ்து தேஷாம் பஹூச்ரீம் ததாஸி

# ஸ்ரீ ஸுப்ரமண்ய புஜங்கம்

**ஸகல விதமான வியாதிகளுக்கும் மாமருந்து**
**செவ்வாய்கிழமைதோறும் பாராயணம் செய்வது உத்தமம்**

**ஸதா3 பா3லரூபாபி விக்4நாத்3ரிஹந்த்ரீ**
**மஹாத3ந்திவக்த்ராபி பஞ்சாஸ்யமான்யா ।**
**விதீ4ந்த்3ராதி3 ம்ருக்3யா க3ணேசாபி4தா மே**
**வித4த்தாம் ச்ரியம் காபி கல்யாணமூர்த்தி: ।।**

எப்பொழுதும் குழந்தை உருவமாயிருந்தாலும் விக்ன மலைகளை நாசம் செய்பவரும், யானை முகத்தோனாயினும் ஐம்முகத்தோனால் பூஜிக்கப்படுகிறவரும், நான்முகன், இந்திரன் முதலியவர்களால் தேடப்படுகிறவரும், கணேசன் என்னும் பெயருடையவருமான ஒரு கல்யாண உருவமானது செல்வத்தைக் கொடுக்கட்டும்.

**ந ஜாநாமி பத்3யம் ந ஜாநாமி க3த்3யம்**
**ந ஜாநாமி சப்த3ம் ந ஜாநாமி சார்த்த2ம் ।**
**சிதே3கா ஷடா3ஸ்யா ஹ்ருதி2 த்3யோததே மே**
**முகா2ந்நிஸ்ஸரந்தே கி3ரஸ்சாபி சித்ரம் ।।**

சுலோகம், வசன நடை, சப்தம், அர்த்தம் ஒன்றும் எனக்குத் தெரியாது. எனினும், ஆறுமுகமுள்ள ஓர் அறிவானது என் ஹிருதயத்தில் ஒளிவிட்டு முகத்திலிருந்து விதவிதமான சொல்லாகவும் வெளிவருகிறது.

**மயூராதி4ரூட4ம் மஹாவாக்யகூ3ட4ம்**
**மனோஹாரிதே3ஹம் மஹச்சித்தகே3ஹம் ।**

மஹீ தே3வ தே3வம் மஹாவேத3பா4வம்
மஹா தே3வ பா3லம் ப4ஜே லோகபாலம் ||

மயில்வாஹனனும், வேதங்களிலுள்ள மஹா வாக்யங்களில் மறைந்தவனும், மனத்திற்கு இன்பமளிக்கக்கூடிய சரீரத்தை உடையவனும், பெரியோர்களின் மனத்தை இருப்பிடமாய்க் கொண்டவனும், அந்தணர்கள் தெய்வமும், பெருமை வாய்ந்த வேதப்பொருளும், மஹாதேவன் குழந்தையுமாகி உலகத்தைக் காக்கின்ற முருகனை வணங்குகிறேன்.

யதா3 ஸந்நிதா4னம் க3தாமானவா மே
ப4வாம்போ4தி4 பாரம் க3தாஸ்தே ததை3வ |
இதி வ்யஞ்ஜயன் ஸிந்து4 தீரே ய ஆஸ்தே
தமீடே3 பவித்ரம் பராசக்தி புத்ரம் ||

'என் ஸன்னிதியை எப்பொழுது மனிதர்கள் அடைகிறார்களோ அப்பொழுதே பிறவிக் கடலைத் தாண்டி விடுகிறார்கள்' என்று காண்பித்துக் கொண்டு கடற்கரையில் கோயில் கொண்டுள்ள பராசக்தியின் புதல்வனான அந்தப் பவித்ரமான முருகனைத் துதிக்கின்றேன்.

யதா3ப்தே4ஸ்தரங்கா3 லயம் யாந்தி துங்கா3:
ததை3வாபத3ஸ்ஸன்னிதி4ம் ஸேவதாம் மே |
இதீவோர்மிபங்க்தீர் ந்ருணாம் த3ர்சயந்தம்
ஸதா3 பா4வயே ஹ்ருத்ஸரோஜே கு3ஹம் தம் ||

எப்படிக் கடல் அலைகள் மிக உயரமாக வந்தாலும் (கடலுள்) மறைந்து விடுகின்றனவோ, அவ்வாறே என் ஸன்னிதியில்

ஸேவிக்கிறவர்களுக்கு ஆபத்துகளும் மறையும் என்று அலை களின் வரிசையை மனிதர்களுக்குக் காட்டிக் கொண்டிருக்கும் குகனை என் இருதயத் தாமரையில் எப்பொழுதும் வைத்துத் தொழுகிறேன்.

**கி³ரௌ மந்நிவாஸே நரா யேऽதி⁴ரூடா⁴**
**ததா³ பாவதே ராஜதே தேऽதி⁴ரூடா³ ।**
**இதீவ ப்³ருவன் க³ந்த⁴ சைலாதி³ரூட³:**
**ஸ தே³வோ முதே³ மே ஸதா³ ஷண்முகோ³ஸ்து ।।**

'எந்த மனிதர்கள் நான் வசிக்கும் மலையில் ஏறினார் களோ, அப்பொழுதே அவர்கள் கயிலையங்கிரியை அடைந்த வர்களாய் ஆகிறார்கள்' என்று சொல்லுகிறவர் போல, கந்தமலை யிலிருக்கும் அந்த தேவனான ஆறுமுகன் எப்பொழுதும் எனக்கு மகிழ்ச்சியளிக்கட்டும்.

**மஹாம்போ⁴தி⁴ தீரே மஹாபாபசோரே**
**முநீந்த்³ராநுகூலே ஸுக³ந்தா⁴க்³யசைலே ।**
**கு³ஹாயாம் வஸந்தம் ஸ்வபா⁴ஸா லஸந்தம்**
**ஜநார்த்திம் ஹரந்தம் ச்ரயாமோ குஹம் தம் ।।**

பெரிய பாபங்களைப் போக்கடிப்பதும், கடற்கரையில் உள்ளதும், முனிவர்களுக்கு உகந்ததுமான 'ஸுகந்தம்' என்னும் மலையின் குகையில் வசிப்பவனும், தன் ஸ்வயம் பிரகாசத்தால் ஜ்வலிப்பவனும், ஜனங்களின் துயரங்களைப் போக்குகிறவனு மான குகனை ஆச்ரயிக்கிறேன்.

**லஸத்ஸ்வர்ணகே³ஹே ந்ருணாம் காமதோ³ஹே**
**ஸுமஸ்தோம ஸஞ்ச²ன்ன மாணிக்யமஞ்சே ।**

ஸமுத்$^{3}$யத் ஸஹஸ்ரார்க்க துல்ய ப்ரகாசம்
ஸதா பா$^{4}$வயே கார்த்திகேயம் ஸுரேசம் ||

மனிதர்களின் இஷ்டங்களைக் கொடுக்கிற ஒளிவிடும் பொன்மயமான வீட்டில், பூக்களால் மறைக்கப்பட்ட மாணிக்கக் கட்டிலில் விளங்குபவரும், உதிக்கும் ஆயிரம் சூரியர்களுக்கு ஒப்பான ஒளியோடு கூடியவரும், கார்த்திகை நக்ஷத்திரங் களின் புதல்வரும், தேவர்களின் தலைவருமான முருகனை எப்பொழுதும் தொழுகிறேன்.

ரணத்$^{3}$த$^{4}$ம்ஸகே மஞ்ஜுளேத்யந்தசோணே
மனோஹாரி லாவண்ய பீயூஷபூர்ணே |
மன: ஷட்பதோ$^{3}$ மே ப$^{4}$வக்லேசதப்த:
ஸதா$^{3}$ மோத$^{3}$தாம் ஸ்கந்த$^{3}$ தே பாத$^{3}$பத்$^{3}$மே ||

சப்திக்கின்ற அழகான பாத ஸரங்களையுடையதும், அழகானதும், மிகவும் சிவந்ததும், மனத்திற்கு இன்பத்தை அளிக்கும் அழகான அம்ருதத்தால் நிறைந்ததுமான உன் திருவடித் தாமரைகளில் ஸம்ஸாரத் துயரால் வேகும் என் மனமாகிற வண்டு எப்பொழுதும் களிக்கட்டும்.

ஸுவர்ணாப$^{4}$ தி$^{3}$வ்யாம்ப$^{3}$ரைர்பா$^{4}$ஸமாநாம்
க்வணத்கிங்கிணீமேக$^{2}$லா சோப$^{4}$மாநாம் |
லஸத்$^{3}$தே$^{4}$மபட்டேந வித்யோதமாநாம்
கடிம் பா$^{4}$வயே ஸ்கந்த$^{3}$ தே தீப்$^{3}$யமாநாம் ||

பொன்போல் ஒளிவிடுகிற உயர்ந்த பட்டாடையினால் விளங்குவதும், ஒலிக்கிற சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணத்

தால் அழகாயிருப்பதும், பொன்னாலான அரைஞாணுடன் மிகவும் ஒளிவிடுவதுமான உன் இடுப்புப் பிரதேசத்தை, ஹே ஸ்கந்னே! எப்பொழுதும் சிந்தனை செய்கிறேன்.

**புளிந்தே3ச கன்யா க4னாபோக3 துங்க3-**
**ஸ்தநாலிங்க3நாஸக்த காச்மீரராக3ம் ।**
**நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர:**
**ஸ்வப4க்தாவநே ஸர்வதா3 ஸாநுராக3ம் ।।**

வேடராஜன் குமாரியான வள்ளிதேவியின் உயர்ந்த தனபாரத்தை ஆலிங்கனம் செய்வதால் உண்டான செஞ் சந்தனக் குழம்பின் அடையாளத்தையுடையதும், தன் அடியார் களைக் காப்பதில் எப்பொழுதும் அன்புடனிருப்பது மான தாரகனைக் கொன்ற முருகனான உன் மார்பை நான் வணங்குகிறேன்.

**விதௌ4க்லுப்த த3ண்டா3ன் ஸ்வலீலா த்4ருதாண்டா3ன்**
**நிரஸ்தேப4 சுண்டா3ன் த்3விஷத் காலதண்டா3ன் ।**
**ஹதேந்த்3ராரிஷண்டா3ன் ஜக3த் த்ராண சௌண்டா3ன்**
**ஸதா3 தே ப்ரசண்டா3ன் ச்ரயே பாஹுத3ண்டான் ।।**

நான்முகனைத் தண்டித்தவைகளும், தன் விளையாட் டால் ஆட்டிவைத்த அண்டங்களையுடையதும், யானைத் துதிக்கைகளைப் பழிப்பனவும், சத்ருக்களுக்கு யமதண்டம் போன்றவைகளும், இந்திரனின் சத்ருக்களைக் கொன்றவை களும், உலகத்தைக் காப்பவைகளும், எப்பொழுதும் பலத்தோடு கூடியவைகளுமான உன் கைகளைச் சரணமடைகிறேன்.

ஸதா[3] சாரதா[3] ஷண்ம்ருகா[3]ங்கா[3] யதி[3]ஸ்யு:
ஸமுத்[3]யந்த ஏவ ஸ்தி[2]தாஸ்சேத் ஸமந்தாத் ।
ஸதா[3] பூர்ணபி[3]ம்பா[3]: களங்கைஸ்சஹீநா:
ததா[3] த்வந் முகா[3]நாம் ப்ருவே ஸ்கந்த[3]ஸாம்யம் ।।

சரத்காலத்துப் பூர்ணிமையில் களங்கமில்லாமல் ஒரே சமயத்தில் எல்லாப் பக்கங்களிலும் ஆறு சந்திரர்கள் எப்பொழுதும் பூரண உருவில் உதயமாகும் பக்ஷத்தில் அப்பொழுது உன் முகத்திற்கு உவமை சொல்வேன். (உன் முகத்திற்கு உவமை கிடையாதென்றே பொருள்).

ஸ்பு[3]ரன் மந்த[3]ஹாஸை: ஸஹம்ஸாநிசஞ்சத்
கடாக்ஷாவளீ ப்[4]ருங்கஸங்கோ[4]ஜ்வலாநி ।
ஸுதா[4]ஸ்யந்தி[3] பி[3]ம்பா[3]த[4]ராணீசஸூனோ
தவாலோகயே ஷண்முகா[3]ம்போ[4]ருஹாணி ।।

ஈச குமாரனே! புன்சிரிப்பாகிற அன்னங்களோடு விளங்குபவனவும், சஞ்சரிக்கும் கடைக்கண் வரிசையான வண்டுகளோடு பிரகாசிப்பனவும், அம்ருதத்தைக் கொட்டுகிற உதடுகளோடு கூடியனவுமான தாமரை மலர்களாகிய உன் ஆறு முகங்களைக் காண்கிறேன்.

விசாலேஷு கர்ணாந்த தீ[3]ர்கே[4]ஷ்வஜஸ்ரம்
தயாஸ்யந்தி[3]ஷு த்[3]வாத[3]சஸ்வீக்ஷணேஷு ।
மயீஷத்கடாக்ஷ: ஸக்ருத்பாதிதஸ்சேத்
ப[4]வேத்தே தயாசீல கா நாம ஹானி: ।।

விசாலமானவையும், காதுகள் வரை நீண்டவைகளும், எப்பொழுதும் தயையைப் பெருகவிட்டுக் கொண்டிருப்பவை களுமான உன் பன்னிரண்டு கண்களில், ஒரு தடவை கொஞ்சம் பார்வை என்னிடத்தில் விழுந்தால், ஹே, தயை நிறைந்தவனே! உன் பெயருக்கு என்ன குறைவு வந்துவிடும்?

**ஸூதாங்கோத்3ப4வோமேஸி ஜீவேதி ஷட்3தா4**
**ஜபன்மந்த்ரமீசோ முதா3ஜிக்4ரதேயான் ।**
**ஜக3த்3பா4ரப்4ருத3்ப்4யோ ஜகன்னாத3தேப்4ய:**
**கிரீடோஜ்வலேப்4யோ நமோ மஸ்தகேப்4ய: ।।**

'குழந்தையே, என்னிடத்தில் உண்டானவனே, ஆயுளுடன் இரு' என்னும் மந்திரத்தைப் பரமேசுவரரால் ஆறு தடவை ஜபம் செய்து மகிழ்ச்சியுடன் முகர்ந்து பார்க்கப் படுபவைகளும், உலகத் தின் சுமைகளைத் தாங்குபவைகளும், கிரீடங்களால் ஒளிர்பவை களுமான, ஹே, ஜகந்நாதனே! உன் ஆறு தலைகளுக்கு வணக்கம்.

**ஸ்புரத்3ரத்ன கேயூர ஹாராபி4ராம:**
**சலத்குண்ட3ல ஸ்ரீலஸத்3க3ண்ட3பா4க: ।**
**கடௌ பீதவாஸா: கரே சாருசக்தி:**
**புரஸ்தாந்மமாஸ்தாம் புராரேஸ்தநூஜ: ।।**

ஒளியுடன் கூடிய ரத்தினத் தோள்வளைகள், மாலை களால் எழிலுற்றவனும், ஆடுகிற குண்டலங்களின் ஒளியால் விளங்கும் கன்னப் பிரதேசமும், இடுப்பில் மஞ்சள் பட்டு வஸ்திரமும், கையில் அழகான வேலும் உடையவனுமான, முப்புர மெரித்த சிவனுடைய குமாரன் என் முன்னால் இருக்கட்டும்.

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான்ப்ரஸார்ய
ஆஹ்வயத்யாத3ராச்சங்கரே மாதுரங்காத் ।
ஸமுத்பத்ய தாதம் ச்ரயந்தம் குமாரம்
ஹராச்லிஷ்டகா3த்ரம் ப4ஜே பாலமூர்த்திம் ।।

"இங்கு வா, குழந்தாய்!" என்று சங்கரர் கையை நீட்டி ஆசையுடன் கூப்பிட்ட உடன் தாயின் மடியிலிருந்து எழுந் திருந்து தகப்பனாரை அடைந்து அந்த ஹரனால் தழுவிக் கொள்ளப்பட்ட சரீரத்தை உடையவரும், குழந்தை உருவினரு மான முருகனை வணங்குகிறேன்.

குமாரேசஸூநோ கு3ஹ ஸ்கந்த3 ஸேநா -
பதே சக்திபாணே மயூராதி4ரூட4 ।
புளிந்தா3த்மஜாகாந்த ப4க்தார்த்திஹாரின்
ப்ரபோ4தாரகாரே ஸதா3 ரக்ஷ மாம் த்வம் ।।

குமரா, ஈச புத்திரா, குஹா, ஸ்கந்தா, ஸேநாபதியே, வேலை கையில் உடையோனே, மயில் வாகனனே, வேடராஜன் மகளான வள்ளி மணாளனே, அடியார்களின் துயரைப் போக்கடிப்பவனே, தாரகனைக் கொன்ற பிரபுவே, எப்பொழுதும் நீ என்னைக் காப்பாயாக.

ப்ரசாந்தேந்த்3ரியே நஷ்டஸம்ஜ்ஞே விசேஷ்டே
கபோ2த்கா3ரிவக்த்ரே ப4யோத்கம்பிகா3த்ரே ।
ப்ரயாணோன்முகே3 மய்யநாதே2 ததா3நீம்
த்3ருதம் மே த3யாளோ ப4வாக்3ரே கு3ஹ த்வம் ।।

புலன்கள் அடங்கி, நினைவிழந்து, செய்கையற்று, வாயில் சளி அடைக்க, பயத்தினால் உடல் நடுங்க, இறப்பதற்கு முற்பட்ட சமயத்தில், துணையற்ற எனக்கு தயை நிறைந்த வனான குகனே, நீ விரைவோடு என் முன் நிற்க வேண்டும்.

**க்ருதாந்தஸ்ய தூ3தேஷு சண்டே3ஷுகோபாத்**
**த3ஹச்சி3ந்தி4 பி4ந்தீ4திமாம் தர்ஜயத்ஸு।**
**மயூரம் ஸமாருஹ்ய மா பை4ரிதி த்வம்**
**புர: சக்திபாணி: மமாயாஹி சீக்4ரம் ॥**

மிகவும் கடுமையான யமதூதர்கள் கோபத்துடன் "பொசுக்கு! வெட்டு! பிள!" என்று என்னை மிரட்டும் சமயம், மயிலில் ஏறி "பயப்படாதே" என்று நீ என்முன் சக்திவேலும் கையுமாக வரவேண்டும்.

**ப்ரணம்யாஸக்ருத் பாத3யோஸ்தே பதித்வா**
**ப்ரஸாத்3ய ப்ரபோ4 ப்ரார்த3யே (அ)நேகவாரம்।**
**ந வக்தும் க்ஷமோஹம் ததா3நீம் க்ருபாப்தே4**
**ந கார்யாந்தகாலே மநாக3ப்யுபேக்ஷா ॥**

உன் திருவடிகளில் விழுந்து பலமுறை வணங்கி, பிரபுவே, உன்னைப் பன்முறை (இப்பொழுதே) ப்ரார்த்திக் கிறேன். ஏ, கருணைக் கடலே! (மரணம் நேரும்) அப்பொழுது நான் பேசும் சக்தியுடையவனாய் இருக்க மாட்டேன். (எனவே) இறக்கும் சமயத்தில் (நான் வேண்டாததால்) ஒருபொழுதும் என்னை நிராகரிக்கக் கூடாது என்று இப்பொழுதே வேண்டிக் கொள்கிறேன்.

ஸஹஸ்ராண்ட3போ4க்தா த்வயா சூரநாமா
ஹதஸ்தாரக: ஸிம்ஹவக்த்ரச்ச தை3த்ய: ।
மமாந்தர்ஹ்ருதி3ஸ்த3ம் மந: க்லேசமேகம்
ந ஹம்ஸி ப்ரபோ4 கிம் கரோமி க்வ யாமி ।।

பிரபுவே! ஆயிரம் அண்டங்களை ஆண்டநுபவித்த சூர பத்மன், தாரகன், சிங்கமுகன் என்னும் அரக்கர்கள் உன்னால் கொல்லப்பட்டனர். என் இருதயத்தில் உள்ள ஒரே ஒரு மனத் துயரை நீ போக்காவிட்டால் என்ன செய்வேன்? எங்கு போவேன்?

அஹம் ஸர்வதா3 து:க2 - பா4ராவஸன்னோ
ப4வாந் தீ3னப3ந்து3ஸ் த்வத3ன்யம் ந யாசே ।
ப4வத்ப4க்திரோத4ம் ஸதா3 க்லுப்தபா3த4ம்
மமாதி4ம் த்4ருதம் நாசயோமாஸுத த்வம் ।।

உமையாள் மகனே! நான் எப்பொழுதும் துக்கச் சுமையினால் தளர்ந்தவன். நீர் ஏழைகளுக்கிரங்குகிறவர். உம்மைத் தவிர வேறொருவரையும் நான் நாடவே மாட்டேன். உன்னிடத்து பக்தியைத் தடுப்பதும், ஓயாமல் உபத்திரவம் கொடுப்பதுமான என் மனநோயைப் போக்கடிப்பாயாக!

அபஸ்மார குஷ்ட3 க்ஷயார் ச: ப்ரமேஹ
ஜ்வரோன்மாத3 கு3ல்மாதி3 ரோகா3 மஹாந்த: ।
பிசாசாச்ச ஸர்வே ப4வத்பத்ரபூ4திம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்3ரவந்தே ।।

தாரகனைக் கொன்றவரே! அபஸ்மாரம் என்னும் காக்கை

வலிப்பு, குஷ்டம், க்ஷயம், மூலநோய், நீரிழிவு, ஜுரம், பைத்தியம், குல்மம் முதலிய பெரிய நோய்கள், பிசாசுகள் எல்லாமும் இலையில் கொடுக்கப்படும் உன்னு டைய திருநீற்றைப் பார்த்த உடனேயே ஓடி விடுகின்றன. (செந்திலாண்டவன் விபூதியைப் பன்னீர் இலையில் வைத்து வழங்குவது வழக்கம்).

**த்$^3$ருசி ஸ்கந்த$^3$மூர்த்தி: ச்ருதௌ ஸகந்த$^3$கீர்த்திர் -**
**முகே மே பவித்ரம் ஸதா$^3$ தச்சரித்ரம் ।**
**கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்$^4$ருத்யம்**
**கு$^3$ஹே ஸந்து லீநா மமாசேபா$^4$வா: ।।**

கண்ணில் ஸ்கந்தன் உருவம், காதில் முருகன் புகழ், எப்போதும் என் வாக்கில் பரிசுத்தமான அவன் சரித்திரம், கையில் அவன் கார்யங்கள், என்றும் உடல் அவன் சேவைக்கு, என்னுடைய ஸகல எண்ணங்களும் குகனிடத்தே லயமடைந்தவைகளாய் ஆகட்டும்.

**முநீநாமுதாஹோ ந்ருணாம் ப$^4$க்திபா$^4$ஜாம்**
**அபீ$^4$ஷ்டப்ரதா$^3$ஸ்ஸந்தி ஸர்வத்ர தே$^3$வா: ।**
**ந்ருணாமந்த்யஜாநாமபி ஸ்வார்த்$^3$தா$^3$நே**
**கு$^3$ஹாத்தே$^3$வமந்யம் ந ஜாநே ந ஜாநே ।।**

பக்தி செய்கின்ற மனிதர்களுக்கும், முனிவர்களுக்கும் இஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய தெய்வங்கள் எங்கும் இருக் கின்றன. ஈனப் பிறப்பெடுத்த மனிதர்களுக்கும், இஷ்டத்தைக் கொடுக்கக் கூடியவர் முருகக் கடவுளைத் தவிர வேறொரு வரையும் நான் அறியேன், அறியேன்.

களத்ரம் ஸுதா ப3ந்து4வர்க3: பசுர்வா
நரோ வாத3 நாரீ க்3ருஹே யே மதீ3யா: ।
யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ ப4வந்தம்
ஸ்மரந்தஸ்ச தே ஸந்து ஸர்வே குமார ॥

குமரக் கடவுளே! என்னைச் சேர்ந்த மனைவி மக்கள், பந்துக்கள், பசுக்கள், ஆண், பெண் எல்லோரும் உம்மைக் குறித்தே யாகம் செய்தல், வணங்குதல், துதித்தல், நினைத்தல் இவைகளைச் செய்கிறவர்களாய் இருக்கட்டும்.

ம்ருகா3: பக்ஷிணோ த3ம்சகா யே ச து3ஷ்டாஸ் –
ததா2 வ்யாத4யோ பா3த4கா யே மத3ங்கே3 ।
ப4வச்சக்தி – தீக்ஷ்ணாக்3ரபி4ந்நா: ஸுதூ3ரே
விநச்யந்து தே சூர்ணிதக்ரௌஞ்சசைல ॥

கிரௌஞ்சம் என்னும் மலையைப் பொடி செய்தவரே! மிருகங்கள், பக்ஷிகள், தீய கிருமிகள், அவ்வாறே என் உடலில் துன்புறுத்தும் நோய்கள் எல்லாம் உம்முடைய வேலின் கூரிய முனையால் பிளக்கப்பட்டவைகளாய் வெகுதூர சென்று நாசமடையட்டும்.

ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராத4ம்
ஸஹேதே ந கிம் தேவஸேநாதி4நாத2 ।
அஹம் சாதிபா3லோ பவாந் லோகதாத:
க்ஷமஸ்வாபராத4ம் ஸமஸ்தம் மஹேச ॥

தேவஸேனையின் கணவரே! தாயும், தந்தையும் தன் மகனின் குற்றங்களைப் பொறுக்க மாட்டார்களா என்ன? மஹேசா! நான் மிகச் சிறியவன். தாங்கள் உலகின் தந்தை. ஆகவே, என் குற்றம் அனைத்தையும் பொறுத்தருள்வீராக.

நம: கேகிநே சக்தயே சாபி துப்4யம்
நம: ச்சா2க3 துப்4யம் நம: குக்குடாய ।
நம: ஸிந்த4வே ஸிந்து4தே3சாய துப்4யம்
புந: ஸ்கந்த3மூர்த்தே நமஸ்தே நமோஸ்து ।।

ஸ்கந்தமூர்த்தியே! உம்முடைய மயிலுக்கும், வேலுக்கும், ஆட்டுக்கும், கோழிக் கொடிக்கும் வணக்கம்! கடலுக்கும், கடற்கரையிலிருக்கும் உமக்கும் வணக்கம். மறுபடியும் உமக்கு வணக்கம். வணக்கம்.

ஜயாநந்த3பூ4மந் ஜயாபாரதா1மந்
ஜயாமோக4கீர்த்தே ஜயாநந்த3மூர்த்தே ।
ஜயாநந்த3ஸிந்தோ4 ஜயாசேஷப3ந்தோ4
ஜய த்வம் ஸதா3 முக்திதாநேசஸூநோ ।।

ஈச புத்திரனே! ஆனந்தத்தின் இருப்பிடமானவனே! வெல்க! மேலான ஸ்தானத்தில் உள்ளவனே! வெல்க! வீணாகாத புகழுடையவனே! வெல்க! ஆனந்த மூர்த்தியே! ஆனந்தக் கடலே! வெல்க! எல்லோருக்கும் உற்றவனே! வெல்க! மோக்ஷத்தைக் கொடுக்கிற நீ எந்நாளும் வெல்க!

பு4ஜங்கா3க்3ய வ்ருத்தேந க்லுப்தம் ஸ்தவம் ய:
படே2த் ப4க்தியுக்தம் கு3ஹம் ஸம்ப்ரணம்ய ।
ஸுபுத்ராந் களத்ரம் த4நம் தீ3ர்க4மாயு:
லபே4த் ஸ்கந்த3ஸாயுஜ்யமந்தே நர: ஸ: ।।

புஜங்கம் என்னும் விருத்தத்தினால் செய்யப்பட்ட இந்தத் துதியை எவன் குஹனை நன்கு வணங்கி, பக்தியுடன் படிக்கிறானோ அவன் நல்ல பிள்ளைகள், மனைவி, செல்வம், நீண்ட ஆயுள் இவைகளுடன் முடிவில் ஸ்கந்தனின் ஸாயுஜ்யத்தை அடைவான்.

## அருணகிரி நாதர் அருளிய **வேல் வகுப்பு**

**செவ்வாய்தோறும் பாராயணம் செய்ய சகல காரியசித்தி உண்டாகும்**

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன தான

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி விழிக்குநிகர் ஆகும்

பனைக்கைமுகா படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை தெறிக்கஅரம் ஆகும்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குஉருகி வரைக்குகையை
இடித்துவழி காணும்

பசித்துஅலகை முசித்து அழுது முறைப்படுதல்
ஒழித்து அவுணர் உரத்து உதிரம் நிணத்தசைகள்
புசிக்க அருள் நேரும்;



சுரர்க்கும்முநி வரர்க்கும்மக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்கும்உறும்
இடுக்கண்வினை சாடும்

சுடர்ப்பரிதி ஒளிப்பநிலவு ஒழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும்

துதிக்கும்அடி யவர்க்குஒருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கொர்துணை ஆகும்

சொலற்குஅரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்துஎறிய உறுக்கிஎழும்
அறத்தைநிலை காணும்;

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை கழற்குநிகர் ஆகும்

தலத்தில்உள கணத்தொகுதி களிப்பின்உண(வு)
அழைப்பதுஎன மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளைவு ஆகும்

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும்இது புறத்தும்அரு(கு) அடுத்த இரவு
பகல்துணையது ஆகும்

சலத்துவரும் அரக்கர்உடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும்;

திரைக்கடலை உடைத்துநிறை புனல்கடிது
குடித்துஉடையும் உடைப்புஅடைய அடைத்துஉதிரம்
நிறைத்துவிளை யாடும்

திசைக்கிரியை முதல்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததுஎன முகட்டின்இடை பறக்கஅற
விசைத்துஅதிர ஓடும்

சினத்துஅவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்துஎயிறு கடித்துவிழி
விழித்து அலற மோதும்

திருத்தணியில் உதித்துஅருளும் ஒருத்தன்மலை
விருத்தன் எனது உளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே!!

# ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்

## (பிரதோஷத்தன்று காலையில் பாராயணம் செய்து வந்தால் ஸகலவிதமான தோஷ நிவர்த்தி)

கல்யாணம் நோ வித4த்தாம் கடகதடலஸத்கல்பவாடீ நிகுஞ்ஜ-
க்ரீடா3ஸம்ஸக்த வித்3யா த்3ர நிவகவதூ4 கீ3தருத்3ராபதா3ந: ।
தாரை: ஹேரம்ப3நாதை: தரலித நினத3த்தாரகாராதிகேகீ
கைலாஸ: சர்வநிர்வ்ருத்யபிஜனகபத:
ஸர்வதா3 பர்வதேந்த்3ர: ।। 1

தாழ்வரையில் விளங்கும் கற்பகமரக் கூட்டங்களில் இருக்கும் புதருக்குள் விளையாடுவதில் ஈடுபட்ட வித்யாதரப் பெண்களின் கூட்டத்தால் பாடப்பட்ட பரமசிவனுடைய வீரச்செயலை உடையதும், உரத்த வினாயகருடைய ஒலிகளால் சஞ்சலமானதும், ஒலிக்கின்றதுமான தாரகனை வென்ற முருகனின் மயிலை உடையதும், பரமசிவனுக்கு ஆனந்தத்தை விளைவிக்கும் சுற்றுபிரதேசத்தை உடையது மான, மலைகளுக்கு அரசனாகிய கைலாஸம், எப்பொழுதும் நமக்கு மங்களத்தை செய்யட்டும்.

யஸ்ய: ப்ராஹு: ஸ்வரூபம் ஸகலதி3விஷதா3ம்
ஸாரஸர்வஸ்வயோக3ம் யஸ்யேஷு: சார்ங்கத4ன்வா ஸமஜனி
ஜக3தாம் ரக்ஷணே ஜாக3ரூக: ।
மௌர்வீ த3ர்வீகராணாமபி ச பரிப்3ருட4: பூஸ்த்ரயீ ஸா ச
லக்ஷ்யம் ஸோ அவ்யா த4வ்யா ஜமஸ்மாநசிவபி4த்
அனிசம் நாகினாம் ஸ்ரீபினாக: ।। 2

எந்த பினாகத்தினுடைய உருவத்தை எல்லா தேவர்களுடைய முக்கிய ஸாராம்சங்களின் சேர்க்கையாக சொல்லுகின்றார்களோ, உலகங்களின் ரக்ஷணையில், விழிப்போடு கூடிய (சார்ங்கம் என்னும் வில்லை உடைய) மஹாவிஷ்ணு எதற்கு பாணமாக ஆனாரோ, மேலும், பாம்புகளுக்கு அரசனாகிய வாஸுகி நாண் கயிறானானோ, உலகத்தை துன்புறுத்திப் புகழ்பெற்ற அந்த பட்டண உருவம் கொண்ட மூன்று அசுரர்களும் குறியாகவும் ஆனார்களோ, தேவர்களுக்கு எப்பொழுதும் அமங்களத்தை அகற்றும், அந்த காந்தி பொருந்திய பினாகம் என்ற வில் கபடமின்றி (காரணம் பாராமல்) எங்களைக் காப்பாற்ற வேண்டும்.

ஆதங்காவேக3ஹாரீ ஸகலதிவிஷதா3ம் அங்க்4ரி
பத்3மாச்ரயாணாம் மாதங்காத்யுக்3ர தை3த்யப்ரகரதனு
க3ளத்3 ரக்ததா4ராக்ததா4ர:।
க்ரூர: ஸூர்யாயுதா நாமபி ச பரிப4வம் ஸ்வீயபா4ஸா
விதன்வன் கோ4ராகார: குடா3ரோ த்3ருட4தர
து3ரிதாக்3யாடவீம் பாடயேந் ந:।। 3

தாமரை போன்ற திருவடியைத் தஞ்சமாய் அடைந்த, எல்லா தேவர்களுடைய கவலையையும், துன்பத்தையும் அகற்றுகின்றதும் மாதங்கள் முதலிய கெட்ட அசுரக்கூட்டத்தின் சரீரத்தினின்று பெருகுகின்ற இரத்தப் பெருக்கால் பூசப்பட்ட நுனியை உடையதும், கொடியதும், தன் ஒலியால் பதினாயிரம் சூரியர்களுக்கு அவமதிப்பை செய்வதும், பயங்கர வடிவம் கொண்டதுமான (சிவபெருமான் கையில் உள்ள) கோடாலி, மிகவும் வலிமையான எங்களுடைய பாபம் என்னும் காட்டை, பிளந்து அழிக்க வேண்டும்.

காலாராதே: கராக்[3]ரே க்ருதவஸதி: உரச் சாணசாதோ ரிபூணாம்
காலே காலே குலாத்[3]ரிப்ரவர தனயயா கல்பிதஸ்னேஹலேப: ।
பாயாந்ந: பாவகார்சி: ப்ரஸரஸக[2]முக[2]: பாபஹந்தாநிதாந்தம்
சூல: ஸ்ரீபாதஸேவாப[4]ஜன ரஸஜுஷாம்
பாலனைகாந்தசீல: ।। 4

யமனை வென்ற பரமசிவனுடைய கை நுனியில் வாஸம் செய்வதும், எதிரிகளுடைய மார்பாகின்ற சாணைக் கல்லில் தீட்டப்பட்டதும், அவ்வப்பொழுதும், குல பர்வதங்களில் சிறந்த ஹிமவானின் பெண்ணாகிய பார்வதி அன்னையால், செய்யப்பட்ட எண்ணெயின் பூச்சோடு கூடியதும், நெருப்பின் ஜ்வாலை போன்ற நுனியை உடையதும், முற்றிலும் தீவினையை ஒழிப்பதும், சிவனின் திருவடியின் சேவையாகின்ற பக்தியின் ரஸத்தை அனுபவிப்பவர்களை, தவறாமல் காக்கும் இயல்புடையதுமான, சூலம் நம்மை காக்கவேணும்.

தேவஸ்யாங்கா[3]ச்ரயாயா: குலகி[3]ரி து[3]ஹிது: நேத்ரகோணப்ரசார
ப்ரஸ்தாரானத்யுதா[3]ரான் பிபடிஷுரிவ
யோ நித்யமத்யாத[3]ரேண ।
ஆத[4]த்தே ப[4]ங்கி[3]துங்கை[3]ரநிசமவயவை: அந்தரங்க[3]ம் ஸமோத[3]ம்
ஸோமாபீட[3]ஸ்ய ஸோயம் ப்ரதிசது
குசலம் பாணிரங்க[3] குரங்க[3] ।। 5

எந்த மான், பரமசிவனுடைய மடியில் வீற்றிருக்கும், குலாசலமான ஹிமவானுடைய பெண்ணாகிய பார்வதியினுடைய பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்வதில் மிக்க தாராளமான, கடைக்கண்களின் பலவிதமான பரவுதல்களை

என்றும் மிகுந்த ஆவலோடு, படிக்க விருப்பம் கொண்டது போல், வளைவுகளால் உயர்வற்ற உறுப்புக்களால் (தேவியின் பார்வையை கற்பதற்காக ஈசனின் கை மான் பல விதங்களில் அங்கங்களை நெளிக்கிறது) சந்திரனைத் தலைக்கு அணியாகக் கொண்ட பரமசிவனுடைய உள்ளத்தை மகிழ்வோடு கூடியதாக செய்கின்றதோ, அந்த பரமசிவன் கையை ஆடலரங்காகக் கொண்ட மான், நன்மையை எப்பொழுதும் கொடுக்கட்டும்.

குறிப்பு : (பரமசிவன் கையில் வேதம் மானுருவம் கொண்டிருப்பதாகப் புராணம் கூறுகிறது. அது உடம்பை பல விதத்தில் பங்கம் (நர்த்தனத்திற்கேற்றபடி அசைத்தல்) செய்து கொண்டிருப்பதைப் பார்த்தால் பார்வதியின் கடைக்கண் பார்வையில் அசைத்தலை கவனித்துக் கற்றுக் கொள்வதற்கு அதற்கேற்றபடி உடம்பை அசைத்துக் கொள்வதுபோல் இருப்பதாக இந்த ச்லோகத்தில் கூறப்பட்டிருக்கிறது).

கண்ட3ப்ராந்தாவஸஜ்ஜத்கனகமய மஹாக4ண்டிகா
கோ4ரகோ4ஷை: கண்டா3ராவைரகுண்டை3ரபி ப4ரித
ஜக3ச்சக்ரவாலாந்தரால: ।
சண்ட: ப்ரோத்3த3ண்ட3ச்ருங்க3: ககுத3கப3லிதோத் துங்க3
கைலாஸச்ருங்க3: கண்டே3காலஸ்ய வாஹ: சமயது சமலம்
சாச்வத: சாக்வரேந்த்3ர: ।। 6

கழுத்தின் ஓரத்தில் தொங்கும் பெரிய தங்க மணியினுடைய பயங்கரமான முழக்கங்களாலும், மழுங்காத (அதிக ஒலியோடு கூடிய) ஹம்பா காரங்களாலும் உலக வட்டத்தின்

நடுவை நிரப்பியதும், மிகக் கொடியதும், பயங்கரமான கொம்பை உடையதும், முதுகில் இருக்கும் ககுதத்தால் (திமிலால்) உயர்ந்த கைலாயத்தின் சிகரத்தை வென்றதும், கழுத்தில் கறுப்பை உடையவரான பரமசிவனுடைய வாகனமுமான அழிவற்ற விருஷபராஜன் பாவத்தை அகற்றட்டும்.

நிர்யத்3தா3னாம்சுதா4ராபரிமளதரலீ பூ4தரோலம்ப3பாலீ
ஜ3ங்காரை: சங்கராத்3ரே: சிகரசதத3ரீ:
பூரயன் பூ4ரிகோ4ஷை: ।
சார்வ: ஸௌவர்ணசைலப்ரதிமப்ருது3வபு: ஸர்வவிக்4னாபஹர்தா
சர்வாண்யா: பூர்வஸூனு: ஸ ப4வது பவதாம்
ஸ்வஸ்திதோ3 ஹஸ்திவக்த்ர: ।। 7

பெருகுகின்ற மத நீர்ப்பெருக்கின் மணத்தால் கவரப்பட்ட சஞ்சலமான வண்டுகளின் வரிசைகளின் ஜம் என்ற ஒலிகளாலும், மிக்க வீரிடுதல்களாலும், பரமசிவனின் மலையாகிய கைலாயத்தின் நூற்றுக்கணக்கான சிகரங்களில் இருக்கும் குகைகளை நிரப்பிக் கொண்டுள்ள பரமசிவனின் பிள்ளையும், தங்க மலை எனப்படும் மேருமலைக்கு ஒப்பான பருத்த உடலை உடையவரும், எல்லா இடையூறுகளையும் அகற்றுபவரும், பார்வதியின் முதற் பிள்ளையானவருமான, அந்த யானை முகம் உடைய கணபதி, உங்களுக்கு நன்மையைக் கொடுப்பவராக இருக்கட்டும்.

ய: புண்யைர் தே3வதானாம் ஸமஜனி சிவயோ:
ச்லாக்4யவீர்யை - மூர்த்யா:
யன்னாம்நி ச்ரூயமாணே தி3திஜப4டக4டா பீ4திபா4ரம் ப4ஜந்தே ।

பூ4யாத்ஸோ (அ)யம் விபூத்யை
நிசிதசர சிகாபாடிதக்ரௌஞ்சசைல:
ஸம்ஸாராகா3த4கூபோத3ரபதித
ஸமுத்தாரகஸ்தாரகாரி:।। 8

எந்த ஸ்கந்தன் தேவர்களுடைய புண்ணியங்களால், பார்வதீபரமேஸ்வரர்களுடைய புகழத்தக்க ஒற்றுமையினால் உண்டானாரோ, எவருடைய பெயர் கேட்கப்படும்பொழுது, அசுர வீர்களின் கூட்டங்கள் அதிக பயத்தை அடைகின்றார் களோ, கூரிய பாணத்தின் நுனியால் க்ரௌஞ் மலையைப் பிளந்தவரும், ஸம்ஸாரம் என்ற ஆழமான கிணற்றினுள் விழுந்தவர்களைக் கரையேற்றுபவருமான அந்த தாரகனை வென்ற ஸ்கந்தன் ஐச்வர்யத்தின் பொருட்டு ஆக வேண்டும். (ஐஸ்வர்யங்களை அளிக்க வேண்டும்).

ஆரூட4: ப்ரௌட4வேக3ப்ரஜவிதபவனம் துங்க3துங்க3ம் துரங்க3ம்
சேலம் நீலம் வஸான: கரதலவிலஸத்
காண்ட3கோத3ண்ட3தண்ட3:।
ராக3த்3வேஷா தி3நாநாவித4ம்ருக3படலீ பீதிக்ருத்3 பூ4தப4ர்த்தா
குர்வன்னாகே3டலீலாம் பரிலஸது
மன:கானனே மாமகீனே:।। 9

அதிகமான வேகத்தால் காற்றைத் தோற்கடிக்கும் உயரமான குதிரையில் ஏறிக் கொண்டவரும், கறுப்பான வஸ்திரத்தை கட்டிக் கொண்டவரும், கையில் விளங்கும் அம்பு வில்லை உடையவரும், பிரதம கணங்களை ஆட்சி செய்பவருமான சாஸ்தா, என்னுடையதான மனதாகிற

காட்டில் ஆசை, வெறுப்பு முதலிய பற் பல விலங்குகளின் கூட்டத்திற்கு பயத்தைச் செய்து கொண்டு, வேட்டை என்னும் விளையாட்டை செய்கிறவராக விளங்கட்டும்.

அம்போ4ஜாப்4யாம் ச ரம்பா4ரத3சரண
லதாத்3வந்த்3வ கும்பீ4ந்த்3ரகும்பை4:
பி3ம்பே3னேந்தோ3ச்ச கம்போ3ருபரி விலஸதா
வித்3ருமேணோத் - பலாப்யாம்: |
அம்போ4தேனாபி ஸம்பா4விதமுப ஜனிதா ட3ம்ப3ரம் சம்ப3ராரே:
சம்போ4: ஸம்போ4கயோக்யம் கிமபி த4னமித3ம்
ஸம்ப4வேத் ஸம்பதே3 ந: || 10

இரண்டு தாமரைகளாலும், வாழை, தேர்ச்சக்கரம், கொடி, சிறந்த யானையின் இரண்டு கும்பங்கள் இவைகளாலும், சங்கினுடைய மேலே விளங்குகின்ற சந்திரனுடைய பிம்பத்தாலும், பவழத்தாலும், இரண்டு அல்லி மலர்களாலும், மேகத்தாலும் கௌரவிக்கப்பட்டதும், உண்டாக்கப்பட்ட ஆடம்பரத்தை உடையதும், பரமசிவனுக்கு சேர்க்கைக்குத் தக்கதுமான சம்பரன் என்ற அஸுரனை வென்ற மன்மதனுடைய இன்னது என்று சொல்ல இயலாத, இந்த தனம் நமக்கு செல்வத்திற்காக ஏற்படவேண்டும்.

குறிப்பு : இந்த ச்லோகத்தில் தேவியை மன்மதனுடைய தனமாக வர்ணித்திருக்கிறது. தேவியினுடைய அவயவங்களைத் தாமரை, வாழை முதலானவற்றோடு சமமாக இருப்பதாகவும் கூறி இருக்கிறது. ஆனால் தேவியையோ, தேவியின் அவயவங்களையோ குறிக்கும் சொற்கள் இங்கு காணப்

படவில்லை. ஸம்ஸ்க்ருத காவ்யம் படித்து பழக்கமிருப் போருக்கு இந்த ச்லோகத்தை வாசித்த உடனேயே தேவியையும், தேவி உறுப்புகளையும் தான் இந்த ச்லோகத்தில் குறிக்கிறார் கவி என்று அறிய முடியும். இவ்விதம் வர்ணிப்பது ரூபகாதிசயோக்தி என்று வழங்கும் சிறந்த அலங்காரமாகும்.

**வேணீஸௌபா4க்3யவிஸ்மாபித**
**தபனஸூதாசாருவேணீ விலாஸான்**
**வாணீநிர்தூ4தவாணீகரதல**
**வித்4ருதோ3தாரவீணாவிராவான் ।**
**ஏணீ நேத்ராந்தப4ங்கீநிரஸன நிபுணாபாங்க3கோணானுபாஸே**
**சோணான்ப்ராணானுதூ3ட4 ப்ரதிநவ**
**ஸூஷமாகந்த3லானிந்து3 - மௌளே: ।।** 11

பின்னலின் அழகால் வியக்கும்படி செய்யப்பட்ட சூரியன் பெண்ணாகிய யமுனையின் அழகிய பெருக்கின் விலாஸங் களை உடையவளும், சொல்லால் உதறித் தள்ளப்பட்ட ஸரஸ்வதியின் கையில் தாங்கிய உயர்ந்த வீணையின் நாதத்தை உடையவளும், பெண் மானுடைய கடைக் கண்ணின் பங்கங்களை விரட்டுவதில் திறமை பூண்ட கடாக்ஷங்களை உடையவளும், புதிது புதிதாய்த் தளிர்க்கும் காந்தியை உடையவைகளுமான, பரமசிவனுடைய சிவந்த உயிர்நிலைகளை (ப்ராணன்களைப் போன்ற பார்வதியை) ஸேவிக்கின்றேன்.

(குறிப்பு : தேவியின் பின்னல் கருநீர்ப் பெருக்கான

யமுனையையும், அவளது குரல் ஸரஸ்வதியின் வீணை நாதத்தையும், வீணை கடாக்ஷம் மானின் பார்வையையும் வெல்வன என்பது கருத்து)

ந்ருத்தாரம்பே4ஷு ஹஸ்தாஹதமுரஜ
தி4மித்3தி4ங்க்ருதைரத்யுதா3ரை:
சித்தானந்த3ம் வித4த்தே ஸத3ஸி ப4கவத:
ஸந்ததம் ய:ஸ நந்தீ3।
சண்டீ3சாத்யாஸ்ததா3(அ)ன்யே சதுரகு3ண
க3ணப்ரீணிதஸ்வாமிஸத்கார
உத்கர்ஷோ த்3யத்ப்ரஸாதா3: ப்ரமத3பரிப்ருடா4:
பாந்து ஸந்தோஷிணோ ந:।। 12

எவர் பகவானுடைய நிருத்தம் தொடங்கும்பொழுது, மிகவும் புகழத்தக்க அவையில் கையால் அடிக்கப்பட்ட மிருதங்கத்தின் திமி திமி என்ற சப்தங்களால் எப்பொழுதும் பகவானுடைய மனதிற்கு ஆனந்தத்தை செய்கின்றாரோ அந்த நந்தியும் அப்படியே உயர்ந்த குணக்குவியல்களால் திருப்தி செய்யப்பட்ட பகவான் செய்த ஸத்காரத்தினால் உண்டான ஸந்தோஷமுடையவர்களும், எப்பொழுதும் இன்புற்றிருப்பவர்களும், மற்ற சண்டீசர் முதலிய பிரதம கணங்களில் சிறந்தவர்களும் நம்மைக் காக்கட்டும்.

முக்தாமாணிக்யஜாலை: பரிகலிதமஹாஸாலமாலோகனீயம்
ப்ரத்யுப்தாநர்க4ரத்னைர் தி3சிதி3சி ப4வனை:
கல்பிதைர் தி3க்பதீனாம்।
உத்3யானைரத்3ரிகன்யாபரிஜன வனிதா மானனீயை: பரீதம்

ஹ்ருத்3யம் ஹ்ருத்3யஸ்து நித்யம் மம
புவனபதேர்தா4ம ஸோமார்த4மௌலே:।। 13

முத்துக்கள், மாணிக்கங்கள் இவைகளால் கட்டிய பெரிய கோட்டை மதிலை உடையதும், பார்க்கத்தக்கதும், விலை மதிக்க முடியாத இரத்தினங்களால் இழைத்தவைகளும், ஒவ்வொரு திக்கிலும் திக்பாலகர்களுக்காக கட்டப்பட்ட வீடுகளாலும், பார்வதி தேவியின் வேலைக்காரப் பெண்களால் அன்போடு வளர்க்கப்பட்ட தோட்டங்களாலும் சூழப்பட்டதுமான உலகத்திற்கே பதியாகிய அர்த்த சந்திரனைத் தலையில் அணிந்த பரமசிவனுடைய அழகிய இருப்பிடம் எப்பொழுதும் என்னுடைய உள்ளத்தில் இருக்கட்டும்.

ஸ்தம்பை4ர்ஜம்பா4ரிரத்னப்ரவரவிரசிதை:
ஸம்ப்ருதோபாந்தபா4க3ம்
சும்ப4த்ஸோபானமார்க3ம் சுசிமணிநிசயை:
கும்பி4தானல்பசில்பம்।
கும்பை4ஸ்ஸம்பூர்ணசோப4ம் சிரஸி
ஸூக4டிதை: சாதகும்பை4ரப4ங்கை3:
சம்போ4: ஸம்பா4வனீயம் ஸகலமுனிஜனை:
ஸ்வஸ்தி3தம் ஸ்யாத் ஸதோ3 ந:।। 14

சிறந்த இந்திர நீலக் கற்களால் செய்யப்பட்ட தூண்களால் சூழப்பட்ட சுற்று பிரதேசத்தை உடையதும், தூய மணிகளின் கூட்டங்களால் விளங்கும் படிக்கட்டை உடையதும், மேல் பக்கத்தில் நன்றாக அமைக்கப்பட்டவைகளும், மாசற்றவை களும் ஆன, தங்கமயமான குடங்களால் காந்தி நிறைந்ததும்,

எல்லா முனிவர்களாலும் மதிக்கத்தக்கதுமான பரமசிவ னுடைய ஸபை, நமக்கு நன்மைகள் கொடுப்பதாக இருக்க வேண்டும்.

ந்யஸ்தோ மத்[4]யேஸபா[4]யா: பரிஸரவிலஸத் பாத[3]பீடா[3]பி[4]ராமோ
ஹ்ருத்[3]ய: பாதை[3]ச்சதுர்பி[4]: கனகமணிமயை:
உச்சகைருஜ்ஜ்வலாத்மா ।
வாஸோரத்னேன கேனாப்யதி[4]கம்ருது[3]தரேண
ஆஸ்த்ருதோ விஸ்த்ருத ஸ்ரீ:
பீட[2]: பீடா[3]ப[4]ரம் ந: சமயது சிவயோ.
ஸ்வைரஸம்வாஸயோக்[3]ய ।। 15

ஸபையினுடைய நடுவில் போடப்பட்டதும், அருகில் விளங்குகின்ற பாதம் வைத்துக் கொள்ளும் பீடத்தினால் அ அழகுற்றதாயும், கவர்ச்சி வாய்ந்ததும், உயர்ந்தவைகளும் தங்கம் இரத்தினங்கள் இவைகளால் ஆனவைகளுமான நான்கு கால்களால் துலங்குகின்றதும், மிகவும் மெல்லிய, சொல்ல இயலாத மேன்மை கொண்டதொரு, சிறந்த ஆடை யினால் மூடப் பட்டதும், பரவிய ஒளியை உடையதும், பார்வதீ பரமேச்வரர் களுக்கு தனிமையில் இச்சைப்படி இருப்பதற்கு ஏற்றதும் ஆன பீடம் நம்முடைய துன்பத்தின் பளுவை ஒடுக்கட்டும்.

ஆஸீனஸ்யாதி[4]பீ[2]டம் த்ரிஜக[3]த[3]தி[4]
பதேரங்க்[4]ரிபீடா[2] நுஷக்தௌ
பாதோ[2]ஜாபோ[4] க[3]பா[4]ஜௌ பரிம்ருதுல
தலோல்லாஸி பத்[3]மாதி[3] ரேகௌ ।
பாதாம் பாதா[3]வுபௌ[4] தௌ நமத[3]மரகிரீடோல்லஸச்சாருஹீர -

ச்ரேணீ சோணாயமானோன்னத நக
த்3சகோத்பா4ஸமானௌ ஸமானௌ ।। 16

பீடத்தில் உட்கார்ந்தவரான, மூன்று உலகங்களுக்கும் இறைவனாகிய பரமசிவனுடைய பாதங்கள் வைத்துக் கொள்ளும் பீடத்தில் அமைந்திருப்பவைகளும், தாமரைகளின் உருவத்தை தரிப்பவைகளும், மிகவும் மென்மையான உள்ளங் காலில் விளங்கும் தாமரை முதலிய ரேகைகளை உடையவைகளும், வணங்கும் தேவர்களுடைய கிரீடங்களில் விளங்கும் அழகிய இரத்தினங்களின் வரிசைகளில் சிவந்து உயர்ந்த பத்து நகங்களோடு பிரகாசிப்பவைகளும், ஒன்றுக் கொன்று சமானமானவைகளுமான புகழ்பெற்ற அந்த பரமேச் வரனின் இரண்டு பாதங்கள் நம்மை காப்பாற்றட்டும்.

யன்னாதோ3 வேத3வாசாம் நிக3த்3தி நிகி3லம் லக்ஷணம்
பக்ஷிகேதோ: லக்ஷ்மீஸம்போ4கஸௌக்யம் விரசயதி
யயோச்சாபரோ ரூபபே3த3: ।
சம்போ4ஸ்ஸம்பா4வனீயே பத3கமல ஸமாஸங்க3தஸ்துங்க3
சோபே4 மாங்க3ல்யம் ந: ஸமக்3ரம் ஸகலஸுக3கரே நூபுரே
பூரயேதாம் ।। 17

எவைகளுடைய ஒலி வேதவாக்குடைய எல்லா லக்ஷணத்தையும் சொல்லுகின்றதோ, எவைகளுடைய மற்றொரு உருவச்சிறப்பு, கருடனைக் கொடியாகக் கொண்ட மஹாவிஷ்ணுவிற்கு லக்ஷ்மியோடு சேருவதால் உண்டான இன்பத்தைச் செய்கின்றதோ, எல்லோராலும் மதிக்கத்தக்கவை களும், பரமசிவனுடைய தாமரை போன்ற பாதங்களின் சேர்க்கையால் உயர்ந்த ஜாதியை உடையவைகளும்

எல்லோருக்கும் இன்பமூட்டுகின்றவர்களுமான காற்சிலம்பு நமக்கு நிறைந்த மங்களத்தைத் தரட்டும்.

கருத்து : ஆதிசேஷன் பரமசிவனின் காற்சிலம்பாகச் சுற்றிக் கொண்டு இருக்கிறார். பதஞ்ஜலி முனி ஆதிசேஷனு டைய அவதாரம். அந்தப் பதஞ்சலி முனியே வேதங்களுக்கு இலக்கணம் கூறும் வியாகரணத்திற்கு பாஷ்யம் செய்திருக் கிறார். இதே ஆதிசேஷன் லக்ஷ்மியோடு கூடிய மஹாவிஷ்ணு வுக்கு படுக்கையாக உள்ளார். இவ்விஷயங்களை அடிப்படை யாக வைத்துக் கொண்டு இந்த ச்லோகத்தை பாதாச்சாரியர் இயற்றியுள்ளார்.

எவைகளின் சப்தம் வேதங்களின் இலக்கணத்தைக் கூறுகின்றதோ, மஹாவிஷ்ணுவின் படுக்கையாக இருந்து கொண்டு எவைகள் அவருக்கு லக்ஷ்மியின் சேர்க்கையால் உண்டாகும் சௌக்கியத்தை உண்டாக்குகின்றனவோ, பரமசிவனின் பாத கமலங்களோடு சேருவதால் எவைகள் அதிக ஒலி பெற்று விளங்குகின்றனவோ, எல்லோரும் பூஜிக்கத் தக்கதும், எல்லா சுகத்தைக் கொடுப்பவைகளுமான அந்தப் பாத கமலங்களில் அணிந்த சலங்கைகள் நமக்கு மங்களத்தை உண்டாக்க வேண்டும்.

அங்கே3 ச்ருங்கா3ரயோனே: ஸபதி3 சலப4தாம்
நேத்ரவஹ்னௌ ப்ரயாதே
சத்ரோருத்3த்4ருத்ய தஸ்மா தி3ஷுமதி4
யுக3மதோ4ந்யஸ்தமக்3ரேகிமேதத் ।
சங்காமித்தம் நதானாமமர பரிஷதா மந்தரங்கூரயத் தத்

ஸங்கா4தம் சாரு ஜங்கா4யுக

மகி3லபதேரம்ஹஸாம் ஸம்ஹரேன்ன:।। 18

சிவனது கண்ணிலிருந்தெழுந்த அக்னியில் மன்மதன் விட்டிற்பூச்சிபோல் நொடிப்பொழுதில் நீறியபொழுது, அவனுடைய இரண்டு அம்புறாத்துணிகள் தனியாக எடுக்கப்பட்டு கீழே வைக்கப்பட்டிருக்கின்றனவோ என்று காலில் விழுந்து பணிந்த தேவர்களெல்லாம் சந்தேகமுறக் கூடிய அழகு வாய்ந்த பரமசிவனுடைய ஜங்கைகள் நமது தீச்செயல்களை அழிக்க வேண்டும்.

ஜானுத்3வந்த்3வேன மீனத்4வஜந்ருவர ஸமுத்3கோ3பமானேன

ஸாகம் ராஜந்தௌ ராஜரம்பா4கரிகரகநக

ஸ்தம்ப4ஸம்பா4வநீயௌ।

ஊரூ கௌ3ரீ கராம்போருஹஸரஸ ஸமாமர்த3னா

நந்த3பா4ஜௌ. சாரூ தூ3ரீக்ரியாஸ்தாம் து3ரித முபசிதம்

ஜன்மஜன்மாந்தரே ந:।। 19

மச்சத்தைக் கொடியாகக் கொண்ட மதனராஜனுடைய தாம்பூலப் பெட்டிக்கு ஒப்பான இரண்டு முழங்கால்களோடு கூட விளங்குவதும், இராஜவாழை, (ஈசனின் கணுக்கால் முதல் முழங்கால் வரையிலான பகுதி அம்புறாத்துணி போலுள்ளது). யானையின் துதிக்கை, தங்கத்தூண் இவைகளால் மதிக்கத் தகுந்தவைகளும் (அதாவது இவைகளுடன் ஒப்பிடுங்கால் அவைகளைக் காட்டிலும் மேன்மை பொருந்தியது) பார்வதியினுடைய தாமரை போன்ற கைகளால் இன்பமாயிருக்கும்படி பிடித்து விடுவதினால் உண்டான இன்பத்தை அடைந்தவை

களுமாகிய அழகிய துடைகள், நம்முடைய பிறப்பையும் இதற்கு முந்தைய மற்றுமுள்ள பிறப்புக்களிலும் சேமித்த பாபத்தை அகற்ற வேண்டும்.

ஆமுக்தாநர்க4ர த்னப்ரகரகர பரிஷ்வக்தகல்யாணகாஞ்சீ -
தா3ம்நா ப3த்3தே4ன து3க்3த4த்3யுதிநிசயமுஷா
சீனபட்டாம்ப3ரேண ।
ஸம்வீதே சைலகன்யாஸுசரித பரிபாகாயமாணே நிதம்பே3
நித்யம் நர்நர்த்து சித்தம் மம நிகி2ல
ஜகத் ஸ்வாமின: ஸோமமௌலே: ।। 20

விலையற்ற இரத்தினங்களின் கூட்டத்தின் கிரணங்களால் சூழப்பட்ட மங்களமான தங்க அரைஞாணால் கட்டப் பட்டதும், பாலின் ஒளிக்கூட்டத்தைக் கவருகின்றதுமான சீன தேசத்துப் பட்டாடையினால் மூடப்பட்டதும், பார்வதியின் புண்ணிய பலம் போன்றவைகளுமான அகில அண்ட கோடிகளுக்கும் தலைவனாகிய சந்திரனைத் தலையணி யாகக் கொண்ட பரமசிவனுடைய இடுப்பில் என்னுடைய மனது எப்பொழுதும் நர்த்தனம் செய்யட்டும்.

ஸந்த்4யாகாலானுரஜ்யத்கநகரஸருசா
காலதௌ4தேன கா3ட4ம்
வ்யானத்3த4: ஸ்னிக்3த4முக்த: ஸரஸமுத3ர
ப3ந்தே4ன வீதோபமேன ।
உத்3தீ3ப்தை: ஸ்வப்ரகாசைருபசிதமஹிமா மன்மதா3ரேருதா3ரோ
மத்4யோ மித்3யார்த் த3ஸ த்4ர்யங் மம தி4சது ஸதா3
ஸங்க3திம் மங்க3லாநாம் ।। 21

ராஜனே! உன்னால் நான் எவ்வாறு நினைக்கப் பட்டேனோ அவ்வாறு எவர்கள் தேசாந்திரத்திலோ, நகரத் திலோ, அல்லது யுத்தத்திலோ, சத்ருக்களால் சங்கடம் நேர்ந்த காலத்திலோ, காட்டிலோ, ப்ரவேசிக்க முடியாத கானகத்திலோ, ஸமுத்திரத்திலோ, கொடிகளாலும், செடிகளாலும் அடர்ந்த மலையிலோ நினைப்பார்களோ அவர்களுக்கு இவ்வுலகில் எவ்வஸ்துவும் கிடைக்க அரிதாகவிராது.

**இதம் ஸ்தோத்ரவரம் பக்த்யா ஶ்ருணுயாத்வா படேத வா।**
**தஸ்ய ஸர்வாணி கார்யாணி ஸித்திம்**
**யாஸ்யந்தி பாண்டவா:।।** 33

ஓ பாண்டவர்களே! இந்த உத்தமமான ஸ்தோத்திரத்தை எவன் பக்தியுடன் கேட்பானோ அல்லது படிப்பானோ அவனுடைய கார்யங்கள் யாவும் ஸித்தி பெறும்.

**மத்ப்ரஸாதாச்ச வ: ஸர்வான் விராடநகரே ஸ்திதான்।**
**ந ப்ரஜ்ஞாஸ்யந்தி குரவோ நரா வா தந்நிவாஸின:।।** 34

விராட நகரத்திலிருக்கின்ற உங்கள் அனைவரையும் கௌரவர்களோ, அல்லது அங்கு வஸிக்கிற மனிதர்களோ என்னுடைய ப்ரஸாதத்தினால் அறியமாட்டார்கள்.

**இத்யுக்த்வா வரதா தேவீ யுதிஷ்டிரமரிந்தமம்।**
**ரக்ஷாம் க்ருத்வா ச பாண்டூனாம் தத்ரைவாந்தரதீயத।।** 35

வரன்களைக் கொடுப்பவளான துர்க்காதேவி சத்ருக் களை ஸம்ஹரிக்கும் திறமையுள்ள யுதிஷ்டிரரைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு பாண்டவர்களுக்கு ரக்ஷையைச் செய்து அவ்விடத்திலேயே மறைந்தாள்.

# அர்ஜுனன் செய்த துர்கா ஸ்தோத்ரம்

(மஹாயுத்த ஆரம்ப காலத்தில் இது ஆத்மஞானம், இந்திரிய ஜயம், சத்ரு ஜயம், ஆயுர் விருத்தி, மங்களம் இவைகளைத் தரக்கூடியது).

ஸஞ்ஜய உவாச:

தார்த்தராஷ்ட்ரபலம் த்ருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்திதம் ।
அர்ஜுனஸ்ய ஹிதார்த்தாய க்ருஷ்ணோ வசனமப்ரவீத் ।। 1

ஸஞ்ஜயன் சொல்லலுற்றார். ஸ்ரீ கிருஷ்ணன் யுத்தத்திற்காக வந்திருக்கும் துர்யோதன ஸைன்யத்தைப் பார்த்து அர்ஜுனனுடைய நன்மையின் (ஜயத்தின்) பொருட்டு பின்வரும் வாக்கியங்களைக் கூறினார்.

ஸ்ரீ பகவானுவாச:

ஶுசிர்ப்பூத்வா மஹாபாஹோ! ஸங்க்ராமாபிமுகே ஸ்தித: ।
பராஜயாய ஶத்ரூணாம் துர்கா ஸ்தோத்ரமுதீரய ।। 2

ஸ்ரீ பகவான் சொல்லலுற்றார் : நீண்ட கைகளை உடையவனே! பரிசுத்தவானாகி யுத்த பூமியின் எதிர்முகமாக இருந்துக்கொண்டு சத்ருக்களுடைய தோல்வியின் பொருட்டு துர்க்காதேவியின் ஸ்தோத்திரத்தைச் சொல்லுவாயாக.

ஸஞ்ஜய உவாச:

ஏவமுக்தோऽர்ஜுன: ஸங்க்யே வாஸுதேவேன தீமதா ।
அவதீர்ய ரதாத்பார்த்த: ஸ்தோத்ரமாஹ க்ருதாஞ்ஜலி ।। 3

ஸஞ்ஜயர் சொல்லலுற்றார்: மஹாபுத்திமானான வாஸுதேவனால் இவ்விதம் சொல்லப்பட்ட குந்தியின் புத்திரனாகிய அர்ஜுனன் தேரிலிருந்து இறங்கி கைகூப்பியவனாய்க் கொண்டு யுத்த பூமியில் ஸ்தோத்திரத்தைப் படித்தான்.

அர்ஜுன உவாச:

**நமஸ்தே ஸித்தஸேனானி! ஆர்யே! மந்தரவாஸினி! ।**
**குமாரி! காளி! காபாலி! கபிலே! க்ருஷ்ணபிங்கலே ।।** 4

அர்ஜுனன் சொல்லலுற்றான்: ஸித்தர்களின் ஸேனைகளை நடத்துகிறவளே! பூஜிக்கத்தக்கவளே! மந்தர பர்வதத்தில் வஸிக்கின்றவளே! ப்ரம்ஹசர்ய வ்ரதமுள்ளவளே! அல்லது கெட்டவர்களை நாசம் செய்பவளே! காலசக்தி ரூபமாக இருப்பவளே! கபாலியான பரமேச்வரனுடைய பத்தினியே! கபிலையின் (காறாம்பசுவின்) ரூபமுள்ளவளே! கருநிறம், பொன்னிறம் இவைகளுடையவளே! உனக்கு நமஸ்காரம்.

**பத்ரகாளி! நமஸ்துப்யம் மஹாகாளி! நமோஸ்து தே ।**
**சண்டிசண்டே! நமஸ்துப்யம் தாரிணி! வரவர்ணினி! ।।5 (2 தரம்)**

மங்களத்தை பக்தர்களுக்குக் கொடுப்பவளே! உனக்கு நமஸ்காரம். காலாந்தகருடைய பத்தினியே! துஷ்டர்களிடம் மிகுந்த கோபமுடையவளே! ஸங்கடங்களினின்றும் கரை ஏற்றுபவளே! ஸர்வ ஸௌபாக்ய லக்ஷணங்களுடன் கூடியவளே! உனக்கு நமஸ்காரம்.

**காத்யாயனி! மஹாபாகே! கராலி! விஜயே! ஜயே! ।**
**ஶிகிபிச்சத்வஜதரே! நானாபரணபூஷிதே! ।।** 6

**அட்டஶூலப்ரஹரணே! கட்ககேடகதாரிணி**
**கோபேந்த்ரஸ்யானுஜே! ஜ்யேஷ்டே!**
**நந்தகோப குலோத்பவே ।।** 7

**மஹிஷாஸ்ருக்ப்ரியே நித்யம் கௌஶிகி! பீதவாஸினி ।**
**அட்டஹாஸே! கோகமுகே! நமஸ்தேऽஸ்து ரணப்ரியே ।।** 8

6) கதகோத்திரத்தில் அவதரித்தவளே! மிகவும் பூஜிக்கப் படுபவளே! பயங்கரமாயிருப்பவளே! ஜயசாலியாய் விளங்கு பவளே! ஜயத்தைக் கொடுப்பவளே! மயில் தோகையைக் கொடியாக உடையவளே! பலவிதமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளே! 7) மிகவும் முக்கியமான சூலாயுத முடையவளே! கத்தி, கேடயம் இவைகளைத் தரித்திருப் பவளே! இடையர்களின் தலைவனான ஸ்ரீ கிருஷ்ணனுடைய தங்கையே! சிறந்தவளே! நந்தகோபருடைய வம்சத்தில் உதித்தவளே! 8) எப்பொழுதும் மஹிஷாஸுரனுடைய ரக்தத்தில் ப்ரீதியுடையவளே! குசிக வம்சத்தில் பிறந்தவளே! பொன்னிறமான வஸ்திரமுடையவளே! மிகவும் ப்ரசஸ்தமான (புகழப்படுகின்ற) சிரிப்புடையவளே! சக்கரம்போல் வட்டமான முகமுடையவளே! யுத்தத்தில் ப்ரீதியுடையவளே! உனக்கு நமஸ்காரம்.

**உமே! *ஶ*ாகம்பரி! *ஶ்*வேதே! க்ருஷ்ணே! கைடபநா*ஶி*னி! ।**
**ஹிரண்யாக்ஷி! விரூபாக்ஷி! ஸுதூம்ராக்ஷி! நமோऽஸ்துதே ॥ 9**

உமாதேவி! சாகம்பரியே! வெளுப்பாயும், கருப்பாயு மிருப்பவளே! கைடபாஸுரனை வதம் செய்தவளே! பொன்னிறமான கண்களையுடையவளே! பகுரூப முள்ள கண்களையுடையவளே! (அஸுர ஸம்ஹார காலங்களில் கோபத்தால்) மிகவும் சிவந்த கண்களை யுடையவளே! உனக்கு நமஸ்காரம்.

**வேத*ஶ்*ருதி! மஹாபுண்யே! ப்ரம்ஹண்யே! ஜாதவேதஸி ।**
**ஜம்பூகடகசைத்யேஷு நித்யம் ஸந்நிஹிதாலயே ॥ 10**

வேதங்களாகிற சப்தமுடையவளே! மிகுந்த

புண்யசாலியே! ப்ராம்ஹணர்களுக்கு மிகவும் ஹிதம் செய்பவளே! எல்லாம் அறிந்தவளே! ஜம்பூத்வீப ராஜதானிகளிலும் தேவாலயங்களிலும் எப்பொழுதும் இருப்பவளே! உனக்கு நமஸ்காரம்.

**த்வம் ப்ரஹ்மவித்யா வித்யானாம் மஹாநித்ரா ச தேஹினாம் ।**
**ஸ்கந்தமாதர்பகவதி! துர்கே! காந்தாரவாஸினி ।। 11**

ஸுப்ரஹ்மண்யருடைய தாயே! பூர்ண ஐச்வர்யாதி ஆறு குணங்களுடன் கூடியவளே! ஹே துர்க்கே! காட்டில் வசிப்பவளே! நீ வித்யைகளுக்குள் ப்ரம்ஹ வித்யை: நீ ப்ராணிகளுடைய மஹா நித்ரை (பெரும் தூக்கம்).

**ஸ்வாஹாகார: ஸ்வதா சைவ கலா காஷ்டா ஸரஸ்வதீ ।**
**ஸாவித்ரீ வேதமாதா ச ததா வேதாந்த உச்யதே ।। 12**

நீ தேவர்களின் ஹவிர்பாக மந்திரமாகவும், பித்ருக்களின் ஸ்வதா (அன்ன)யாகவும், கலையாகவும், திக்குகளாகவும், ஸரஸ்வதியாகவும், ஸாவித்திரியாகவும், வேதமாதாவாகவும், (காயத்ரியாகவும்), வேதாந்தமாகவும் சொல்லப்படுகிறாய்.

**ஸ்துதாஸி த்வம் மஹாதேவி! விஶுத்தேனாந்தராத்மனா ।**
**ஜயோ பவது மே நித்யம் த்வத்ப்ரஸாதாத்ரணாஜிரே ।। 13**

ஹே மஹாதேவி! நீ என்னால் பரிசுத்தமான மனதுடன் ஸ்துதிக்கப்பட்டிருக்கிறாய். உனது அருளால் யுத்த களத்தில் எனக்கு எப்பொழுதும் ஜயமேற்படட்டும்.

**காந்தாரபயதுர்கேஷு பக்தானாம் சாலயேஷு ச ।**
**நித்யம் வஸஸி பாதாளே யுத்தே ஜயஸி தானவான் ।। 14**

காடுகளிலும், பிரவேசிக்க முடியாத இடங்களிலும், பக்தர்களுடைய வீடு, பாதாளம் இவற்றிலும் எப்பொழுதும் வஸிக்கிறாய். யுத்தத்தில் அஸுரர்களை ஜயிக்கிறாய்.

**த்வம் ஜம்பனீ மோஹினீ ச மாயா ஹ்ரீ: ஸ்ரீஸ்ததைவ ச ।**
**ஸந்த்யா ப்ரபாவதீ சைவ ஸாவித்ரீ ஜனனீ ததா ।। 15**

நீ சோம்பலைக் கொடுப்பவள். நீ நித்திரை. நீ மாயை. நீ வெட்கம். நீ லக்ஷ்மீ. நீ ப்ரபையுடன் கூடிய ஸந்த்யை. நீ ஸாவித்ரீ. நீ லோகமாதா.

**துஷ்டி: புஷ்டிர்த்ருதிர்தீப்தி*ஶ்* சந்த்ராதித்ய விவர்த்தினீ ।**
**பூதிர்பூதிமதாம் ஸங்க்யே வீக்ஷ்யஸே ஸித்தசாரணை: ।। 16**

நீ சந்திர சூர்யர்களை விசேஷமாக வளர்ப்பவள். நீ தனமுள்ளவர்களுடைய தனம். நீ யுத்தத்தில் ஸித்தர்கள், சாரணர்கள் இவர்களால் காணப்படுகிறாய்.

**ஸஞ்ஜய உவாச:**
**தத: பார்த்தஸ்ய விஜ்ஞாய பக்திம் மானவவத்ஸலா ।**
**அந்தரிக்ஷகதோவாச கோவிந்தஸ்யாக்ரத: ஸ்திதா ।। 17**

ஸஞ்ஜயர் சொல்லலுற்றார்: பிறகு மனிதர்களிடம் மிகவும் வாத்ஸல்யமுள்ளவர்களான தேவி அர்ஜுனனுடைய பக்தியையறிந்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு எதிராக ஆகாசத்தி லிருந்து கொண்டு சொல்லலுற்றாள்.

**தேவி உவாச:**
**ஸ்வல்பேனைவ து காலேன *ஶ*த்ரூஞ்ஜேஷ்யஸி பாண்டவ ।**
**நரஸ்த்வமஸி துர்த்தர்ஷ நாராயண ஸஹாயவான் ।। 18**

தேவி சொல்லலுற்றாள்: ஹே பாண்டு புத்ர! ஸ்வல்ப காலத்துக்குள்ளேயே நீ சத்ருக்களை ஜயிக்கப் போகிறாய். எதிர்க்க முடியாதவனே! நீ நாராயணனை சகாயமாகக் கொண்ட நரனாக இருக்கிறாய்.

அஜேயஸ்த்வம் ரணேऽரீணாமபி வஜ்ரப்ருத: ஸ்வயம்।
இத்யேவமுக்த்வா வரதா க்ஷணேனாந்தரதீயத॥ 19

நீ சத்ருக்களுக்கு ஜயிக்க முடியாதவன். வஜ்ராயுதத்தைத் தரித்தவனும், நேரில் வந்தவனுமான தேவேந்திரனாலும் ஜயிக்க முடியாதவன். வரன்களைக் கொடுப்பவளான தேவி இவ்விதம் சொல்லிவிட்டு உடனே மறைந்தாள்.

லப்த்வா வரம் து கௌந்தேயோ மேனே விஜயமாத்மன:।
ஆருரோஹ தத: பார்த்தோ ரதம் பரமஸம்மதம்॥
க்ருஷ்ணார்ஜுனாவேகரதௌ திவ்யௌ
ஸங்கௌ ப்ரதத்மது:॥ 20

குந்தியின் புத்திரனான அர்ஜுனன் வரத்தைப் பெற்று தன்னுடைய ஜயத்தை எண்ணினான் (நம்பினான்). பிறகு மிகவும் சிறந்ததான தன் ரதத்தில் ஏறினான். கிருஷ்ணன், அர்ஜுனன் இருவர்களும் ஒரே ரதத்திலிருந்து கொண்டு திவ்யமான சங்குகளை ஊதினார்கள்.

ய இதம் படதே ஸ்தோத்ரம் கல்ய உத்தாய மானவ:।
யக்ஷரக்ஷஸ பிஸாசேப்யோ ந பயம் வித்யதே ஸதா॥ 21

எந்த மனிதன் அதிகாலையில் எழுந்திருந்து இந்த ஸ்தோத்திரத்தை வாசிக்கிறானோ அவனுக்கு யக்ஷர், ராக்ஷஸர், பிசாசுகள் இவர்களிடமிருந்து ஒருபொழுதும் பயம் ஏற்படுகிறதில்லை.

ந சாபி ரிபவஸ்தேப்ய: ஸர்ப்பாத்யா யே ச தம்ஷ்ட்ரிண:।
ந பயம் வித்யதே தஸ்ய ஸதா ராஜகுலாதபி।। 22

அவனுக்கு சத்ருக்கள் ஏற்படுவதில்லை. பாம்பு முதலிய விஷப் பற்களுள்ள பிராணிகளிடமிருந்தும், ராஜ வம்சத்திலிருந்தும் எப்பொழுதும் பயமேற்படுகிறதில்லை.

விவாதே ஜயமாப்னோதி பத்தோ முச்யதி பந்தனாத்।
துர்கம் தரதி சாவஸ்யம் ததா சோரைர்விமுச்யதே।। 23

வியவஹாரத்தில் ஜயமடைகிறான். கட்டுப்பட்டவன் கட்டிலிருந்து விடுபடுகிறான். தாண்டமுடியாத கஷ்டத்தையும் நிச்சயமாகத் தாண்டிவிடுகிறான். அவ்விதமே திருடர்களாலும் விடப்படுகிறான்.

ஸங்க்ராமே விஜயேந்நித்யம் லக்ஷ்மீம் ப்ராப்னோதி கேவலாம்।
ஆரோக்யபலஸம்பன்னோ ஜீவேத்வர்ஷஸதம் ததா ।
ஏதத்த்ருஷ்டம் ப்ரஸாதாத்து மயா வ்யாஸஸ்ய தீமத: ।। 24

யுத்தத்தில் எப்பொழுதும் ஜயத்தை அடைகிறான். நிகரற்ற தனத்தையடைகிறான். ஆரோக்கியம், சரீர பலம் இவற்றுடன் கூடியவனாய் நூறு வருஷம் ஜீவிக்கிறான். இஃதெல்லாம் புத்திமானான வியாஸருடைய ப்ரஸாதத்தால் என்னால் காணப்பட்டது.

மோஹாதேதௌ ந ஜானந்தி நரநாராயணாவ்ருஷீ।
தவ புத்ரா துராத்மான: ஸர்வே மன்யுவஸானுகா:।। 25

கோபத்துக்கு வசப்பட்டவர்களும், துராத்மாக்களுமான உமது புத்திரர்கள் மோகத்தால் இந்த கிருஷ்ணன், அர்ஜுனன்,

இவர்களை நரநாராயண ரிஷிகளாக அறிந்து கொள்ளாது இருக்கிறார்கள்.

ப்ராப்தகாலமிதம் வாக்யம் காலபாஸேன குண்டிதா:
த்வைபாயனோ நாரதஸ்ச கண்வோ ராமஸ்ததானக:।
அவாரயம்ஸ்தவ ஸுதம் ந சாஸௌ தத்க்ருஹீதவான்॥ 26

வியாஸர், நாரதர், கண்வர், பரிசுத்தமான பலராமர் ஆகிய இவர்கள் உம்முடைய பிள்ளையைத் தடுத்தார்கள். அவன் அந்த வாக்கியத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. கால பாசத்தால் கட்டுண்டவர்களான உமது புத்திரர்கள் ஸம யோசிதமான இந்த வார்த்தையை ஏற்றுக் கொள்ளவில்லை.

யத்ர தர்மோ த்யுதி: காந்திர்யத்ர ஹ்ரீ: ஸ்ரீஸ்ததா மதி:।
யதோ தர்மஸ்தத: க்ருஷ்ணோ யத:
க்ருஷ்ணஸ்ததோ ஜய:॥ 27

எங்கு தர்மமிருக்கிறதோ, அங்கேயே சோபை, காந்தி, வெட்கம், லக்ஷ்மீ, நல்ல புத்தி, இவைகள் இருக்கின்றன. எங்கு தர்மமோ அங்கேயே ஸ்ரீ கிருஷ்ணனிருக்கிறார். எங்கு ஸ்ரீ கிருஷ்ணனிருக்கிறாரோ அங்கேயே ஜயமேற்படும்.

துர்கா ஸ்தோத்திரம் முற்றிற்று

---

## ஸ்ரீ குஹ ஸ்தோத்ரம் (கணவன் மனைவி ஸுக வாழ்வு பெற)

புளிந்தேச கன்யா கனா போக
துங்க ஸ்தனாலிங்கனாஸகத் காச்மீர ராகம்
நமஸ்யாம யஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவனே ஸர்வதா ஸாநுராகம்

## ஸ்ரீ மஹா பெரியவாளால் தேர்ந்தெடுக்கப்பட்ட லலிதா ஸஹஸ்ர நாமாவளிகள்

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:
ஓம் தேவகார்ய ஸமுத்யதாயை நம:
ஓம் தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூய மானாத்ம - வைபவாயை நம:
ஓம் பக்த ஸௌபாக்யதாயின்யை நம:
ஓம் பக்தி ப்ரியாயை நம: 5

ஓம் பயாபஹாயை நம:
ஓம் ராகமதன்யை நம:
ஓம் மத நாசின்யை நம:
ஓம் மோஹ நாசின்யை நம:
ஓம் மமதா ஹந்த்ர்யை நம: 10

ஓம் பாப நாசின்யை நம:
ஓம் க்ரோத சமன்யை நம:
ஓம் லோப நாசின்யை நம:
ஓம் ஸம்சயக்ன்யை நம:
ஓம் பவ நாசின்யை நம: 15

ஓம் ம்ருத்யு மதன்யை நம:
ஓம் துர்காயை நம:
ஓம் துக்க ஹந்தாயை நம:
ஓம் ஸுக ப்ரதாயை நம:
ஓம் துஷ்ட தூராயை நம: 20

ஓம் துராசார சமன்யை நம:
ஓம் தோஷ வர்ஜிதாயை நம:

ஓம் ஸர்வக்ஞாயை நம:
ஓம் ஸமானாதீக வர்ஜிதாயை நம:
ஓம் ஸர்வ மந்த்ர ஸ்வரூபிண்யை நம: 25
ஓம் ஸர்வ தந்த்ர ரூபாயை நம:
ஓம் ஸர்வ யந்த்ராத்மிகாயை நம:
ஓம் மஹாலக்ஷ்ம்யை நம:
ஓம் மஹாபாதக நாசின்யை நம:
ஓம் மஹா த்ரிபுரஸுந்தர்யை நம: 30
ஓம் சராசர ஜகந்நாதாயை நம:
ஓம் பார்வத்யை நம:
ஓம் ஸ்ருஷ்டிகர்த்தர்யை நம:
ஓம் கோப்த்ர்யை நம:
ஓம் சம்ஹாரிண்யை நம: 35
ஓம் திரோதான கர்யை நம:
ஓம் அனுக்ரஹதாயை நம:
ஓம் ஆப்ரம்மகீட ஜனன்யை நம:
ஓம் வர்ணாச்ரம விதாயின்யை நம:
ஓம் நிஜாக்ஞயாரூப நிகமாயை நம: 40
ஓம் புண்யா புண்ய பலப்ரதாயை நம:
ஓம் ராக்ஷஸக்ஞ்யை நம:
ஓம் கருணாரஸ ஸாகராயை நம:
ஓம் வேத வேத்யாயை நம:
ஓம் ஸதாசார ப்ரவர்த்தினகாயை நம: 45
ஓம் ஸத்ய ப்ரசாதின்யை நம:

ஓம் சிவசங்கர்யை நம:
ஓம் சிஷ்டேஷ்டாயை நம:
ஓம் சிஷ்ட பூஜிதாயை நம:
ஓம் காயத்ரியை நம: 50
ஓம் நிஸ்ஸீம மஹிம்னே நம:
ஓம் ஸமஸ்த பக்த ஸுகதாயை நம:
ஓம் புண்ய லப்யாயை நம:
ஓம் பந்த மோசன்யை நம:
ஓம் ஸர்வ வியாதி ப்ரசமன்யை நம: 55
ஓம் ஸர்வ ம்ருத்யு நிவாரிண்யை நம:
ஓம் கலிகல்மக்ஷ நாசின்யை நம:
ஓம் நித்ய த்ருதாயை நம:
ஓம் மைத்ரயாதி வாஸனா லப்யாயை நம:
ஓம் ஹ்ருதயஸ்தாயை நம: 60
ஓம் தைத்ய ஹன்தர்யை நம:
ஓம் குருமூர்த்தயே நம:
ஓம் கோமாத்ரே நம:
ஓம் கைவல்ய பததாயின்யை நம:
ஓம் த்ரி ஜகத்வந்த்யாயை நம: 65
ஓம் வாகதீச்வர்யை நம:
ஓம் ஞானதாயை நம:
ஓம் ஸர்வ வேதாந்த ஸம்வேத்யாயை நம:
ஓம் யோகதாயை நம:
ஓம் நிர்த்வைதாயை நம: 70

ஓம் த்வைத வர்ஜிதாயை நம:
ஓம் அன்னதாயை நம:
ஓம் வஸுதாயை நம:
ஓம் பாக்ஷாரூபாயை நம:
ஓம் ஸுகாராத்யயாயை நம: 75

ஓம் ராஜ ராஜேஸ்வர்யை நம:
ஓம் ஸாம்ராஜ்ய தாயின்யை நம:
ஓம் ஸர்வார்த்த தாத்ர்யை நம:
ஓம் ஸச்சிதானந்த ரூபிண்யை நம:
ஓம் ஸரஸ்வத்யை நம: 80

ஓம் தக்ஷிணாமூர்த்தி ரூபிண்யை நம:
ஓம் ஸநகாதி ஸமாராத்யாயை நம:
ஓம் நாம பாராயண ப்ரீதாயை நம:
ஓம் மித்யா ஜகதிஷ்டானாயை நம:
ஓம் ஸ்வர்காபவர்க்கதாயை நம: 85

ஓம் பரமந்த்ர விபேதின்யை நம:
ஓம் ஸர்வாந்தர்யாமின்யை நம:
ஓம் ஜன்ம ம்ருத்யு ஜராதப்த ஜனவிச்ராந்திதாயை நம:
ஓம் ஸர்வோப நிஷத் உத்க்ருஷ்டாயை நம:
ஓம் அஜ்ஞாயை நம: 90

ஓம் லீலா விக்ரஹ தாறியிண்யை நம:
ஓம் விநிர்முத்தாயை நம:
ஓம் க்ஷிப்ர ப்ரஸாதின்யை நம:
ஓம் ஸம்ஸாரபங்க நிர்மக்ந ஸமுத்தரண பண்டிதாயை நம:
ஓம் தனதான்ய விவர்தின்யை நம: 95

ஓம் தத்வார்த்த ஸ்வரூபிண்யை நம:
ஓம் ஸர்வாபத்வி நிவாரிண்யை நம:
ஓம் ஸ்வபாவ மதுராயை நம:
ஓம் ஸதா துஷ்டாயை நம:
ஓம் தர்ம வர்தின்யை நம: 100

ஓம் ஸுவாஸின்யை நம:
ஓம் ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதாயை நம:
ஓம் வாஞ்சிதார்த்த ப்ரதாயின்யை நம:
ஓம் அவ்யாஜ கருணாமூர்த்தயே நம:
ஓம் அக்ஞான த்வாந்த தீபிகாயை நம:
ஓம் ஆபால கோப விதிதாயை நம:
ஓம் ஸர்வானுல்லங்க்ய சாஸனாயை நம:
ஓம் லலிதாம்பிகாயை நம: 108

---

## மூக பஞ்ச சதியிலுள்ள காமாக்ஷி ஸ்லோகம்

**ஸ்ரீவித்யை, புத்ரன், கீர்த்தி, உத்யோகம் இவைகளை விரும்புவோர்கள் ஜபிக்க வேண்டிய ச்லோகம்**

ஸ்ரியம் வித்யாம்தத்யாத்ஜனனிநமதாம் கீர்த்திமமிதாம்
ஸுபுத்ரம் ப்ராதத்தே தவ ஜடிதி காமாக்ஷி! கருணா!
த்ரிலோக்யாமாதிக்யம் த்ரிபுரபரிபந்திப்ரணயினி!
ப்ரணாமஸ்த்வத்பாதே ஸமிதுரிதே கிம் ந குருதே!!

ஹே காமாக்ஷி! நமஸ்கரிக்கின்றவர்களுக்கு உனது கருணை யானது தனம், வித்யை, அளவற்ற கீர்த்தி, நல்ல புத்ரன், மூவுலகிலும் மேன்மையாக இருக்கும் தன்மை இவைகளைச் சீக்கிரமாகவே கொடுக்கிறது. ஹே த்ரிபுர ஸம்ஹாரம் செய்த பரமேச்வரரின் ப்ரிய பத்தினியே! பக்தர்களின் பாபத்தைப் போக்குகிற தங்கள் சரணத்தில் செய்த நமஸ்காரமானது எதைத்தான் கொடாது!

# ஸௌபாக்ய லக்ஷ்மீ அஷ்டகம்

இந்த **ஸௌபாக்யலக்ஷ்மி அஷ்டகத்தை எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் பாராயணம்** செய்தால் சகல நன்மைகளையும், வளங்களையும் பெற்றிடலாம்.

வந்தே ஸத்குரு வரலக்ஷ்மீம் ஸம்பூர்ண ஸௌபாக்யலக்ஷ்மீம்
க்ஷீரஸாஹரோத்பவலக்ஷ்மீ ஜயஜய கோலக்ஷ்மீம்
ஆனந்த அம்ருதலக்ஷ்மீம் அம்ருத கடாக்ஷ லக்ஷ்மீம்
ஆபதோத்தாரலக்ஷ்மீம் சாந்தி ஸௌபாக்ய லக்ஷ்மீம்

ஓம் ஸ்ரீ ஆதிஸந்தான கஜ தனதான்ய
விஜய வீர மஹாலக்ஷ்மீயை நமோ நம:

ஸர்வாலங்கார லக்ஷ்மீம் ஸகல ஸௌபாக்ய லக்ஷ்மீம்
சாரதா ரூப லக்ஷ்மீம் ஸகல ஸௌபாக்ய லக்ஷ்மீம்
ஜிஹ்வா நிவாஸ லக்ஷ்மீம் க்ஷேத்ரப்ரஸாத லக்ஷ்மீம்
மந்த்ர ஸ்வரூப லக்ஷ்மீம் மானஸோல்லாஸ லக்ஷ்மீம்
ஸ்ரீமானஸோல்லால லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

விநய விமல லக்ஷ்மீம் வேதாந்த சாரலக்ஷ்மீம்
கருணாகடாக்ஷ லக்ஷ்மீம் காருண்ய பாக்யலக்ஷ்மீம்
புத்ர சந்தான லக்ஷ்மீம் புவனதன தான்யலக்ஷ்மீம்
ஸர்வ ஸௌபாக்ய லக்ஷ்மீம் சாந்தி ஸம்பன்னலக்ஷ்மீம்
ஸ்ரீசாந்தி ஸம்பன்ன லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

வித்யவிசால லக்ஷ்மீம் வேதாந்த மோக்ஷ லக்ஷ்மீம்
அக்ஷரபாக்ய லக்ஷ்மீம் ஆத்மாநுபூதி லக்ஷ்மீம்

தாபத்ரய நாசலக்ஷ்மீம் தன்வந்த்ரிரூப லக்ஷ்மீம்
லோஹஸ்வரூப லக்ஷ்மீம் சுத்தசௌபாக்ய லக்ஷ்மீம்
ஸ்ரீ சுத்த சௌபாக்ய லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

ஸ்தாவர ஜங்கம லக்ஷ்மீம் கோதான்யா விருத்திலக்ஷ்மீம்
ஸோமஸோதர பாக்யலக்ஷ்மீம் சிந்தாமணி ரத்னலக்ஷ்மீம்
க்ஷீரஸௌபாக்ய லக்ஷ்மீம் ஸேவிதமோஹ லக்ஷ்மீம்
ஜயஜயவைராக்ய லக்ஷ்மீம் சித்தப்ரகாச லக்ஷ்மீம்
ஸ்ரீ சித்த ப்ரகாச லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

கல்பக காமதேனு லக்ஷ்மீம் கனகஸௌபாக்ய லக்ஷ்மீம்
தேவேந்தராரோஹண லக்ஷ்மீம் ஐராவத பூஜ்யலக்ஷ்மீம்
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி லக்ஷ்மீம் ஸேவ்யஸம்பன்ன லக்ஷ்மீம்
வீர்யவிஜயலக்ஷ்மீம் விஷ்ணுமாயேதி லக்ஷ்மீம்
ஸ்ரீவிஷ்ணுமாயேதி லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

ஜ்வரபயஸோஹ ஹந்த்ரீம் ஸோஹ விநாஸ மந்த்ரீம்
துஷ்டமிருகவைர்தந்த்ரீம் துர்ஸ்வப்ன நாஸ யந்த்ரீம்
துர்காஸ்வரூப லக்ஷ்மீம் துரிதஹரமோக்ஷ லக்ஷ்மீம்
ஸாயுஜ்ய ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம் ஸத்யஸ்வரூப லக்ஷ்மீம்
ஸ்ரீ ஸத்ய ஸ்வரூப லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

ஜயஜய கோஷ லக்ஷ்மீம் சோம சௌபாக்ய லக்ஷ்மீம்
ஸர்வ ஸக்தி ஸ்வரூப லக்ஷ்மீம் ஸர்வ மூர்த்திப்ரபாவ லக்ஷ்மீம்
அனுக்ரஹ ஆச்சார்ய லக்ஷ்மீம் பாலகுஹ யோஹ லக்ஷ்மீம்
ஸர்வஸமய லக்ஷ்மீம் ஜயமங்கள ஸ்தோத்ர லக்ஷ்மீம்
ஸ்ரீ ஸயமங்கள ஸ்தோத்ர லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

ஞானஸ்வரூப லக்ஷ்மீம் நாதாந்தஞான லக்ஷ்மீம்
ஸ்வரமய கீத லக்ஷ்மீம் ஞானப்ரமோத லக்ஷ்மீம்
ஹ்ருதய கமலவாஸ லக்ஷ்மீம் சதுர்வேதஸார லக்ஷ்மீம்
ஸஹஸ்ரகர ஸௌபாக்ய லக்ஷ்மீம்
ஸ்ரீ அஷ்ட ஸௌபாக்ய ஸ்லோக லக்ஷ்மீம் சரணம் ப்ரபத்யே

---

## வைராக்கியத்தை விரும்புவோர் ஜபிக்க வேண்டிய ஸ்லோகம்

கதா வாராணஸ்யாமமரதடினீ ரோதஸி வஸன்
வஸான: கௌபீனம் *ஶி*ரஸி நிததானோऽஞ்ஜலிபுடம்
அயே கௌரீநாத1 த்ரிபுரஹர! *ஶ*ம்போ! த்ரிநயன!
ப்ரஸீதேத்யாக்ரோ*ஶ*ன் நிமிஷமிவ நேஷ்யாமி திவஸான் !!

நான் எப்பொழுது காசியில் கங்கையின் கரையில் வசித்துக் கொண்டும், கௌபீனம் தரித்துக்கொண்டும், சிரசின் மேல் கைகளைக் கூப்பிக்கொண்டும், ஹே பார்வதீபதே! த்ரிபுராஸுரர்களை ஸம்ஹரித்தவனே! சம்போ! மூன்று கண்களைப் படைத்தவனே! அனுக்ரஹம் செய்என்று கதறிக்கொண்டு நாட்களை ஒரு நிமிஷம் போல் போக்குவேன்!

## விவாகம் ஆக வேண்டிய கன்னிகைகள் ஜபிக்க வேண்டிய ஸ்லோகம்

காத்யாயனி! மஹாமாயே! மஹாயோகின்யதீ*ஶ்*வரி!
நந்தகோபஸுதம் தேவி! பதிம் மே குரு தே நம: !!

கத கோத்திரத்தில் பிறந்தவளும், மாயைகளுக்கெல்லாம் இருப்பிடமும், மகத்தான யோக ஸித்திகளை அடைந்தவளுமான ஹே தேவீ! எனக்கு நந்தகோபருடைய புத்திரனான க்ருஷ்ணனைக் கணவனாகச் செய்வாயாக! உன்னை நமஸ்கரிக்கிறேன்.

# ஸ்ரீ லக்ஷ்மீ க்ருபாவலம்பம்

**27 நக்ஷத்ரங்களிலும் வாஸம் செய்யும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அருளைப் பெற கூற வேண்டிய மங்கள ஸ்தோத்திரம்**

சுமனஸ வந்தித தேவ மனோகரி
**அச்'வினி** தேவி ஸஹாயக்ருபே
க்ஷீர ஸமுத்பவ திவ்யரூபிணி
**பரணி** தேவி ஸஹாயக்ருபே
பங்கஜ வாஸினி பாப விமோசினி
**க்ருத்திகா** தேவி ஸஹாயக்ருபே
மோக்ஷப்ரதாயினி மஞ்சுள பாஷிணி
**ரோஹிணி** தேவி ஸஹாயக்ருபே
மந்த்ர நிவாஸினி சந்த்ர பத்(தி)னி
**ம்ருகசீர்ஷ** தேவி ஸஹாயக்ருபே
தேவ ஸுபூஜித ஸத்குண வர்ஷிணி
**ஆர்த்ரா (திருவாதிரை)** தேவி ஸஹாயக்ருபே
அம்புஜவாஸினி தேவகண ஸேவித
**புனர்வஸு(புனர்பூசம்)** தேவி ஸஹாயக்ருபே
ஜெயவர வர்ணிநி ஜெயப்ரதாயிணி சிவ
**புஷ்ய (பூச)** தேவி ஸஹாயக்ருபே
சீக்ர பலப்ரத பவபய ஹாரிணி சுப
**ஆச்லேஷ (ஆயில்ய)** தேவி ஸஹாயக்ருபே
ஸாது ஜடாச்ரித தேவமுனி பூஜித யோக
**மக** தேவி ஸஹாயக்ருபே
துர்கதி நாசினி தூப ப்ரகாசினி ஜெய
**பூர்வ பல்குனி (பூரம்)** தேவி ஸஹாயக்ருபே
ஞானமய மோகினி சாஸ்த்ர ஸ்வரூபிணி
**உத்திர பல்குனி (உத்திர)**தேவி ஸஹாயக்ருபே

ஹரஹர ஸகாய ஆனந்த பூஜிதலாப **ஹஸ்த** தேவி ஸஹாயக்ருபே
ரதகஜ துரக பதாதி சேவக சாஸ்த்ரமய
**சித்ரா** தேவி ஸஹாயக்ருபே
சக்ரிணி ராக விவர்தினி ஞானமய
**ஸ்வாதி**தேவி ஸஹாயக்ருபே
குங்கும அர்ச்சித அநுதின ஸேவித
**விசாக** தேவி ஸஹாயக்ருபே
சந்த்ரப்ரகாசினி கந்தர்வ காகமய
**அநூராதா (அனுஷா)** தேவி ஸஹாயக்ருபே
பாரதி பார்கவி மந்த்ரமய கோபுர
**ஜ்யேஷ்ட (கேட்டை)** தேவி ஸஹாயக்ருபே
சங்கர தேசிக சாந்த பூரண அன்ன **மூல** தேவி ஸஹாயக்ருபே
அனுதின ஸேவித அச்சுத வரப்பிரஸாத
**பூர்வாஷாட (பூராட)** தேவி ஸஹாயக்ருபே
சோக விநாசினி ரத்னாலங்கார
**உத்திராஷாட (உத்திராட)** தேவி ஸஹாயக்ருபே
மணிமய பூஜித சாந்த ஸ்வரூபிணி
**ச்ரவண (திருவோண)** தேவி ஸஹாயக்ருபே
காவிரி கங்கா நதிரல ஸேவித காந்த
**ச்ரவிஷ்ட (அவிட்ட)** தேவி ஸஹாயக்ருபே
மூலிக ஸேவித முனிப்பிரஸாத
**சதபிஷக் (சதய)** தேவி ஸஹாயக்ருபே
நவநீதி தாயினி நம: சிவாயினி **பூர்வ ப்ரோஷ்டபத**
**(பூரட்டாதி)** தேவி ஸஹாயக்ருபே
சங்க பதும நிதி ஸஹாய ரக்ஷக **உத்திர ப்ரோஷ்டபத**
**(உத்திரட்டாதி)** தேவி ஸஹாயக்ருபே
ஸ்வர்ண ப்ரதாயினி சூக்ஷ்ம ஸஹாயினி
**ரேவதி** தேவி ஸஹாயக்ருபே

# ஸ்ரீ மஹாலக்ஷ்மி வசிக்கும் இடங்கள்

சுக முனிவர் ஒருமுறை ஸ்ரீ மஹாலக்ஷ்மிதேவியிடம் 'செல்வம் உட்பட சகல வளங்களையும் அருளும் தேவியே, பக்தர்களின் வீடுகளில் தாங்கள் நித்திய வாசம் செய்ய வேண்டுமெனில் மக்கள் எப்படி நடந்துக் கொள்ள வேண்டும்?' என்று கனிவுடன் கேட்டார்.

'வெள்ளை மாடப்புறாக்கள் வாழும் இடம், அடக்கமும் அமைதியும் கொண்ட பெண்கள் வாழும் இல்லம், நவதானியங்கள் நிறைந்துள்ள இடம், தானம் செய்து எல்லோருடனும் பகிர்ந்து உண்டு வாழும் நல்ல மனிதர்கள், இனிமையான சொற்களைப் பேசுபவர்கள், பணிவு நிறைந்தவர்கள், நாவை அடக்கியவர்கள், சாப்பிடுவதிலேயே நீண்ட நேரத்தைக் கழிக்காதவர்கள், பெண்களை தெய்வமாக மதிப்பவர்கள் போன்றவை அனைத்திலும் நான் நித்திய வாசம் செய்வேன்.

மேலும் சங்கு, நெல்லிக்காய், கோமியம், தாமரை மலர், வெண்மை நிற உடைகள், சுத்தமான ஆடைகள், சுத்தமான இல்லங்கள் இவற்றிலும் நான் வாசம் செய்கிறேன். தூய உள்ளம் கொண்டு பரிசுத்தமாய் இருப்போர் அனைவரிடத் திலும் நான் நிச்சயம் இருப்பேன் என்று சுகமுனிவருக்குப் பதில் கூறினாள் ஸ்ரீ மஹாலக்ஷ்மி.



## குபேர மந்திரம்

**ஓம் ஸ்ரீம் க்ரீம் ஐம்**
**குபேரலக்ஷ்மியை கமலதாரிண்யை**
**தன ஆகர்ஷ்ணியை சுவாஹா**

# ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்ரம்

## மூலமும் உரையும்

கனகதாரா ஸ்தோத்ரம் ஆதிசங்கரரால் இயற்றப்பட்டது. காலடியிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் இருந்த குருகுலத்தில் சங்கரர் குருகுல வழக்கப்படி உஞ்சவிருத்தி செய்தார். பிட்சை கேட்டு வந்த சங்கரருக்கு தர ஏதுமில்லாத நிலையில் உலர்ந்த நெல்லிக்கனி ஒன்றை இட்டாள் ஒரு பெண்மணி.

அவர்கள் வீட்டு ஏழ்மை நிலையை உணர்ந்த சங்கரர், மஹாலட்சுமியை நினைத்து 21 பாடல்களைப் பாடினார். பாடி முடித்தவுடன் தங்க நெல்லிக்கனிகள் மழைபோல் பொழிந்தன. அவர்கள் வீட்டு வறுமை நீங்கியது.

சங்கரர் அப்போது பாடிய பாடல்களே கனகதாரா ஸ்தோத்திரம். மஹாலட்சுமியை மனதில் வைத்து பக்தியோடு **இதைச் சொல்வோர்க்கு வறுமை நீங்கி வளம் தரக்கூடியது.**

கற்றோரும் போற்றிடும் ஞானம் தர வல்லது. சர்வ ஐஸ்வர்யங்களையும், அஷ்ட ஐஸ்வர்யங்களையும் அளிப்பது என ஆதிசங்கரரே கூறி பெருமைக்குரியது இந்த ஸ்தோத்திரம். கனகதாரா ஸ்தோத்திரங்களைச் சொல்லுங்கள். வெல்லுங்கள்.

அங்கம் ஹரே: புளக பூஷணம் ஆச்ரயந்தீ
ப்ருங்காங்கனேவ முகுளாபரணம் தமாலம்
அங்கீக்ருதாகில விபூதி: அபாங்கலீலா
மாங்கள்யதாஸ்து மம மங்கள தேவதாயா: 1

மலரத் தொடங்கும் முகுள மலரினை, தேன் நாடும் பொன்நிற வண்டுகள் தேடிச் சென்று மொய்க்கின்றன. அப்படித் தங்கநிற வண்டுகள் மொய்க்கும் முகுள மலர் போன்று எழிலுடன் விளங்குகின்றது திருமாலின் மார்பு. அதற்குக் காரணம், அவர் எப்போதும் மகிழ்வுடன் இருப்பது தான். திருமகள் அவரது திருமார்பில் நீங்காது உறைவ தாலேயே அவர் ஆனந்தமாக இருக்கிறார். அத்தகைய உயர்வான அலைமகளின் அருட்பார்வை எனக்கு மங்களம் தரட்டும்.

**முக்தா முஹுூர்விதததீ வதநே முராரே:**
**ப்ரேமத்ர பாப்ரணி ஹிதானி கதாகதானி**
**மாலா த்ருசோ: மதுகரீவ மஹோத்பலேயா**
**ஸா மே ச்ரியம் திசது ஸாகரஸம்பவாயா 2**

நீல மலர்களை நாடி வரும் வண்டுகள் போல் திருமகளின் விழிகள் திருமாலைக் காணும் ஆவலில் சுழல்கின்றன. ஆனால், வெட்கம் தடுப்பதால் அவளது பார்வை திசைமாறி கண்கள் மூடுகின்றன. இவ்வாறு, அழகிய வண்டுகள் போல் சுற்றிச் சுழலும் தேவியின் பார்வை என்மீது பட்டால் எல்லாச் செல்வங்களும் என்னை வந்தடையும். அந்த பாக்கியத்தை தேவி அருளட்டும்.

**விச்வாமரேந்த்ரபத விப்ரமதாநதக்ஷம்**
**ஆனந்த ஹேதுரதிகம் முரவித்விஷோ பி**
**ஈஷந்நிஷீதது மயி க்ஷணம் ஈக்ஷணார்தம்**
**இந்தீவரோதர ஸஹோதரம் இந்திராயா: 3**

வானுலகு ஆளும் இந்திரபதவிக்கு ஈடான உயர்வை பூவுலக வாழ்விலேயே தரவல்லவள் லட்சுமி தேவி. இந்திரன், தன் பதவியை இழந்தபோது தன் கடைக்கண் பார்வை யாலேயே அதனை மீட்டுத் தந்தவள். நீலோற்பல மலரில் அமர்ந்துள்ள வண்டு போன்ற தன் அழகிய விழிகளால் மஹா விஷ்ணுவுக்கு ஆனந்தத்தை அளிப்பவள். அப்படிப்பட்ட அலை மகளின் கருணை நோக்கு ஒருகணமேனும் என்மீது படரட்டும்.

**ஆமீலி தாக்ஷ மதிகம்ய முதா முகுந்தம்**
**ஆனந்தகந்தம் அநிமேஷம் அநங்க தந்த்ரம்**
**ஆகேகரஸ்திதக நீநிக பக்ஷ்மநேத்ரம்**
**பூத்யை பவேந் மம புஜங்க சயாங்கநாயா: 4**

தனது மார்பில் ஸ்ரீதேவி வாசம் செய்யும் சந்தோஷத்தில், கண்களை மூடி ஆனந்தத்தில் ஆழ்ந்திருக்கிறார் மஹா விஷ்ணு. அவ்வாறு மகிழ்ச்சியில் திளைத்திருக்கும் தன் கணவனை இமையாது நோக்குகிறாள் லட்சுமிதேவி. என்றாலும் வெட்கம் காரணமாக அவளது கண்கள் பாதி திறந்தும் பாதி மூடியது மான நிலையில் உள்ளது. பாம்பணையில் துயிலும் பரந்தாமனின் பத்தினியாகிய அலைமகளின் பார்வை என் மீது பட்டு செல்வத்தை அளிக்கட்டும்.

**பாஹ்வந்த்ரே மதுஜித: ச்ரித கௌஸ்துபே யா**
**ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதிஷ**
**காமப்ரதா பகவதோபி கடாக்ஷமாலா**
**கல்யாணம் ஆவஹது மே கமலாலயாயா: 5**

மது எனும் அரக்கனை அழித்த மதுசூதனனாகிய விஷ்ணுவின் மார்பில் கௌஸ்துபம் எனும் ஒப்பற்ற நீல மணிகளைப் போல், தாமரைச் செல்வியான லட்சுமி தேவியின் கண்கள் எழிலோடு காணப்படுகின்றன. அவளது பார்வை மேக வண்ணனான திருமாலுக்கு மோகமூட்டு வதாக உள்ளது. அப்படிப்பட்ட அன்னையின் கடைக்கண் பார்வை என்மீது பதிந்து, சர்வ மங்களங்களையும் வழங்கட்டும்.

**காலாம்புதாலி லலிதோரஸி கைடபாரே:**
**தாராதரே ஸ்புரதி யா தடிதங்க நேவ**
**மாது: ஸமஸ்த ஜகதாம் மஹநீய மூர்த்தீ:**
**பத்ராணி மே திசது பார்க்கவ நந்தநாயா: 6**

கைடபன் என்ற அசுரனை அழித்த திருமாலின் மார்பு, கார்மேகம் போல் திகழ்கிறது. பிருகு முனிவரின் வம்சத்தில் உதித்தவளும், உலகத்தின் தாயுமான லட்சுமி தேவி, கார்மேக வண்ணனின் திருமார்பில் மின்னல்போல் ஒளிவீசி விளங்கு கின்றாள். அத்தகைய ஒளி பொருந்திய தேவியின் திருப்பார்வை, எனக்கு அனைத்து செல்வங்களையும் அருளட்டும்.

**ப்ராப்தம் பதம் ப்ரதமத: கலு யத்ப்ரபாவாத்**
**மாங்கல்யபாஜி மதுமாதினி மன்மதேன**
**மய்யாபதேத் ததிஹ மந்த்ரம் ஈக்ஷணார்த்தம்**
**மந்தாலஸம் ச மகராலய கந்யகாயா: 7**

மது, கைடபரை அழித்த திருமால், சர்வ மங்களங்களுக்கும் உறைவிடமானவர். அத்தகைய பராக்ரமம் மிக்கவரை மன்மதன் தன் மலர்க்கணையாலே வென்று விடுகிறான். அதற்குக் காரணம், அவன் லட்சுமி தேவியின் அருளை பூரணமாகப் பெற்றிருப்பதுதான். பாற்கடலில் தோன்றிய மஹாலட்சுமியின் மோகமூட்டும் பார்வைக்கு ஈடானது ஏதுமில்லை. அந்த அருள்மிகு பார்வை அரைநொடியேனும் என்மீது படரட்டும்.

**தத்யாத்த யானுபவனோ த்ரவிணாம்புதாராம்**
**அஸ்மின்னகிஞ்சன விஹம்கசிசௌ விஷண்ணே**
**துஷ்கர்ம கர்மமபநீய சிராய தூரம்**
**நாராயண ப்ரணயினீ நயனாம் புவாஹ: 8**

நீருண்ட மேகத்திற்கு நிகராக விளங்கும் மஹாலட்சுமியின் கருணை விழிகள், அடியவர்க்கு அருள்மழை பொழியக் கூடியவை. மழை நீரை மட்டுமே உண்டு வாழும் சக்கரவாகப் பறவை, மழை வேண்டி ஏங்குவதுபோல் ஏழையாகிய நான் செல்வம் வேண்டி ஏங்குகின்றேன். அன்னையே, உன் கருணைமழை என் மீது பொழிந்து என் வறுமைத் துன்பம் தொலையட்டும்.

**இஷ்டா விசிஷ்ட மதயோபி யயா தயார்த்ர**
**த்ருஷ்ட்யா த்ரிவிஷ்ட பபதம் ஸுலபம் லபந்தே**
**த்ருஷ்டி: ப்ரஹ்ருஷ்ட கமலோதர தீப்திரிஷ்டாம்**
**புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கர விஷ்டராயா: 9**

மோட்சம் பெறுவதற்கான யாகம் முதலிய முயற்சிகளை அனைவராலும் மேற்கொள்ள முடிவதில்லை. அவரவரது முன்வினைப் பயனுக்கு ஏற்பவே அது நிகழ்கிறது. ஆனால் திருமகளின் அருட்பார்வை பட்டால்போதும்; பாவ வினை களால் பாதிக்கப்பட்டவர்களுக்கும் கூட எவ்வித முயற்சியும் இன்றி முக்தி கிட்டும். மஹாவிஷ்ணுவின் மனதிற்கு மகிழ் வூட்டும் மஹாலக்ஷ்மியின் கருணை நோக்கு என் மேல் பட்டு, சகல வளங்களையும் வழங்கட்டும்.

**கீர்தேவதேதி கருடத்வஜ ஸுந்தரீதி**
**சாகம்பரீதி சசிசேகர வல்லபேதி**
**ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரலய கேலிஷு ஸம்ஸ்திதாயை**
**தஸ்யை நமஸ்த்ரி புவனைக குரோஸ்தருண்யை 10**

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலும் இறைவனின் விளையாட்டுகளாய் நிகழ்வன. அந்த விளை யாட்டுகளில், படைத்தலில் கலைமகளாகவும், காத்தலில் அலைமகளாகவும், அழித்தலில் துர்க்கையாகவும் விளங்கு வதோடு, பிறைசூடிய சிவனாரின் பத்தினியான மலைமகளாக வும் வடிவம் பல எடுத்து அருள் புரியும் பெருமைக்குரிய தேவியே! மூவுலகையும் காக்கும் திருமாலின் துணைவியே! மஹாலட்சுமியே! உன்னை வணங்குகிறேன்.

**ச்ருத்யை நமோஸ்து சுபகர்ம பலப்ரஸூத்யை**
**ரத்யை நமோஸ்து ரமணீய குணார்ணவாயை**
**சக்த்யை நமோஸ்து சதபத்ர நிகேதனாயை**
**புஷ்ட்யை நமோஸ்து புருஷோத்தம வல்லபாயை 11**

வேத வடிவானவளே, நற்கர்மங்களின் பயனை அளிப்பவளே! வணங்குகின்றேன். அழகின் இருப்பிட மானவளே! நற்பண்புகள் நிறைந்தவளே! உன்னை வணங்குகின்றேன். பராசக்தியின் அம்சமானவளே! தாமரையில் வீற்றிருக்கும் அலைமகளே! நிறைவான தெய்வமே! புருஷர்களில் உத்தமனான புருஷோத்தமனின் மனைவியே, மஹாலட்சுமியே! உன்னை வணங்குகின்றேன்.

**நமோஸ்து நாலீக நிபானனாயை**
**நமோஸ்து துக்தோததி ஜன்ம பூம்யை**
**நமோஸ்து ஸோமாம்ருத ஸோதராயை**
**நமோஸ்து நாராயண வல்லபாயை** 12

மலர்ந்த செந்தாமரை போன்ற எழில் முக வடிவினளே! துதிக்கின்றேன். திங்களுடனும், அமுதத்துடனும், பாற்கடலில் தோன்றிய அலைமகளே! வணங்குகின்றேன். பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனின் பத்தினியே! உன்னைப் பணிகின்றேன்.

**நமோஸ்து ஹேமாம்புஜ பீடிகாயை**
**நமோஸ்து பூமண்டல நாயிகாயை**
**நமோஸ்து தேவாதி தயாபராயை**
**நமோஸ்து சார்ங்காயுத வல்லபாயை** 13

பொற்கமலத்தை பீடமாய்க் கொண்ட லட்சுமி தேவிக்கு வணக்கம். தரணி முழுவதற்கும் தலைவியாய்த் திகழும் அன்னைக்கு, தேவர்கள் மீது கருணை உள்ள தேவிக்கு

வணக்கம். சார்ங்கம் எனும் வில்லேந்தும் விஷ்ணுவின் பத்தினிக்கு வணக்கம்.

**நமோஸ்து தேவ்யை ப்ருகுநந்த நாயை**
**நமோஸ்து விஷ்ணோருரஸி ஸ்தித்தாயை**
**நமோஸ்து லக்ஷ்ம்யை கமலாலயாயை**
**நமோஸ்து தாமோதர வல்லபாயை** 14

பிருகு முனிவரின் மகளான மஹாலக்ஷ்மிக்கு வணக்கம். மஹாவிஷ்ணுவின் திருமார்பில் உறையும் திருமகளுக்கு வணக்கம். தாமரையில் வீற்றிருக்கும் லக்ஷ்மி தேவிக்கு வணக்கம். தாமோதரனாகிய திருமாலின் தேவிக்கு வணக்கம்.

**நமோஸ்து காந்த்யை கமலேக்ஷணாயை**
**நமோஸ்து பூத்யை புவனப்ரஸூத்யை**
**நமோஸ்து தேவாதி பிரார்ச்சிதாயை:**
**நமோஸ்து நந்தாத்மஜ வல்லபாயை** 15

ஒளி பொருந்திய தாமரை போன்ற விழிகள் படைத்தவளுக்கு வணக்கம். உலகினைப் பெற்றெடுத்தவளும், செல்வ வடிவினளுமான தேவிக்கு வணக்கம். தேவர்கள் முதலானோராலும் வணங்கப்படும் அன்னைக்கு வணக்கம். நந்தகோபன் மகனான நந்தகுமாரனின் மனைவிக்கு வணக்கம்.

**ஸம்பத் காரணி ஸகலேந்த்ரிய நந்தனானி**
**ஸாம்ராஜ்ய தான விபவானி ஸரோரு ஹாக்ஷி**

**த்வத் வந்தனானி துரிதா ஹரணோத் யதானி**
**மாமேவ மாதரநிசம் கலயந்து மான்யே** 16

கமல மலர்களுக்கு நிகரான கண்களை உடையவளும், தேவர்களாலும், மானிடர்களாலும் போற்றுதலுக்கு உரியவளு மாகிய தேவியே! அனைத்து செல்வங்களையும் அருளக் கூடியவள் நீ! நாடாளும் பாக்கியம் நல்க வல்ல பெருமைக் குரியவள் நீ! ஐந்து புலன்களால் உண்டாகக் கூடிய எந்தத் தீவினையையும் விரைந்து போக்கும் வல்லமை மிக்கவளான உன்னை வணங்குகின்றேன். என்றும் நீங்காது அருள்வாயாக.

**யத்கடாக்ஷஸ முபாஸனா விதி:**
**ஸேவகஸ்ய ஸகலார்த்த ஸம்பத:**
**ஸந்தனோதி வசனாங்க மானஸை:**
**த்வாம் முராரி ஹ்ருதயேச்வரிம் பஜே** 17

முரன் எனும் அசுரனை அழித்து, உலகைக் காத்த, முராரி எனும் திருமாலின் திருமார்பில் உறைந்திடும் தேவியே! உன் அருட்பார்வை வேண்டி தியானம் செய்யும் அடியவர்க்கு சர்வ மங்களமும் வழங்கக் கூடியவள் நீ! அருள் மிக்க உன்னை வாக்கு, மனம், காயம் (சொல், மனம், உடல்) எனும் மூன்று கரணங்களாலும் துதிக்கின்றேன்.

**ஸரஸிஜ நிலயே ஸரோஜ ஹஸ்தே**
**தவளதமாம்சுக கந்தமால்யே சோபே**
**பகவதி ஹரிவல்லபே மனோக்ஞே**
**த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்** 18

பங்கய மலரில் வாசம் செய்பவளே, கரத்தினில் தாமரை ஏந்தியவளே, வாசமிகு வெண்ணிறமாலை அணிந்தவளே, தூய வெண்பட்டாடையினை உடுத்தியவளே, அனைத்து ஞானங்களையும் அறிந்தவளே, ஹரியாகிய திருமாலின் பத்தினியே, மனதை அறிந்திடும் ஆற்றல் மிக்கவளே, மூவுலகிற்கும் செல்வத்தை வழங்குபவளே, எனக்கும் அருள் செய்வாயாக!

**திக்கஸ்திபி: கனக கும்ப முகாவஸ்ருஷ்ட:**
**ஸ்வர்வாஹினீ விமலசாரு ஜலப்லு தாங்கீம்**
**ப்ராதர் நமாமி ஜகதாம் ஜனநீமசேஷ**
**லோகாதிநாத க்ருஹிணீம் அம்ருதாப்தி புத்ரீம் 19**

கங்கை நீர் நிரம்பிய பொற்குடங்களை எட்டுத் திசைகளிலிருந்தும் யானைகள் சுமந்து வருகின்றன. அந்தத் தங்கக் கலசங்களில் உள்ள புனித நீரால் அவை உனக்கு அபிஷேகம் செய்கின்றன. அழகுக்கு அழகு செய்தாற்போன்ற தூய்மையுடன் நீ விளங்குகின்றாய். உலகிற்கே தலைவனாக விளங்கும் மஹாவிஷ்ணுவின் மனைவியும், அமுதம் அளித்த பாற்கடலின் மகளாகத் தோன்றியவளுமான தேவியே! அதிகாலையில் உன்னை வணங்குகின்றேன்.

**கமலே கமலாக்ஷ வல்லபே த்வம்**
**கருணாபூர தரங்கி தைரபாங்கை:**
**அவலோகய மாமகிஞ்சனானாம்**
**ப்ரதமம் பாத்ரமக்ரித்ரிமம் தயாயா: 20**

மென்மையான தாமரையில் வீற்றிருக்கும், தாமரை போல் மென்மையானவளே! கமலமலர் போன்ற கண்களை உடைய திருமாலின் மனைவியே, கருணை அலைவீசும் கடைக்கண் நோக்கு உடையவளே! வறுமையில் வாடுவோரில் முதன்மையானவனாக நான் உள்ளேன். உன் அருட் பார்வையை முதலில் என் மீது படரச் செய்து அருள்வாயாக!

**ஸ்துவந்தி யே ஸ்துதிபி: அமீபி: அந்வஹம்**
**த்ரயீமயீம் த்ரிபுவனமாதரம் ரமாம்**
**குணாதிகா குருதர பாச்ய பாஜிநோ**
**பவந்தி தே புவி புதபாவிதாசயா: 21**

எவர் இந்தத் துதிகளை தினமும் சொல்லி, வேதவடிவான வளும், உலகத்தின் தாயானவளுமாகிய லக்ஷ்மீ தேவியை வணங்குகின்றனரோ, அவர் உயர்ந்த குணநலன்களையும், சகல சௌபாக்யங்களையும் அடைவதோடு, கற்றோரும், மற்றோரும் போற்றிடும் ஞானமும் பெறுவார்.

(கனகதாரா ஸ்தோத்திரம் நிறைவுற்றது)

---

## நினைத்தது அனைத்தும் நிறைவேற

தினமும் காலை மாலை 108 தடவை பாராயணம் செய்ய வேண்டும்.

ஸிம்ஹஸார்தூல ரூபஸ்ச வ்யாக்ர சர்மாம் பராவ்ருத: ।
காலயோகீ மஹாநாத: ஸர்வகாம சதுஷ்பத: ।।

## தீராத வியாதிகள் நீங்க:

108 தடவை ஜபித்து ஜலத்தைத்தொட்டு புரோக்ஷித்துக் கொள்ள வேண்டும்.

அஜைக பாச்ச காபாலீ த்ரிஸங்கு ரஜித ஸ்சிவ: ।
தந்வந்தரிர் தூமகேது: ஸ்கந்தோ வைச்ரவணஸ்ததா ।।

# ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மந்த்ர ராஜபத ஸ்தோத்ரம்

திருமணத்தடை, குழந்தை வரம், கடன் பிரச்சனை, குடும்பத்தில் கருத்து வேறுபாடு, சொத்து பிரச்சனை, தம்பதிகள் பிரிந்திருத்தல், தொழிலில் பின்னடைவு, இன்னும் வாழ்க்கையில் எத்தனையோ பிரச்சனைகள் குறுக்கிடுகின்றன. அவை அத்தனையையும் உடைத்தெறியும் அழகான ஸ்தோத்திரமே ஸ்ரீ மந்திர ராஜபத ஸ்தோத்திரம். தினமும் மாலையில் லட்சுமி நரசிம்மர் படத்தின் முன் காய்ச்சி பாலை படைத்து இதை சொல்ல வேண்டும். ஸ்லோகம் படிக்க சிரமமாக இருந்தால் பொருளைப்படித்து பயன் பெறலாம்.

**வ்ருத்தோத் புல்ல விசாலாக்ஷம் விபக்ஷக்ஷய தீக்ஷிதம் ।**
**நிநாத த்ரஸ்த விச்வாண்டம் விஷ்ணும் உக்ரம் நமாம்யஹம் ।।**

பெரியதும், உருண்டையானதும், பக்தர்களைக் கண்டு மகிழ்வதுமான அகன்ற கண்களைக் கொண்டவரே! கம்பீர சிங்க கர்ஜனையால் அனைத்து உலகங்களையும் நடுங்கச் செய்பவரே! உக்கிர வடிவான நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**ஸர்வை ரவத்யதாம் ப்ராப்தம் ஸபலௌகம் திதே: ஸுதம் ।**
**நகாக்ரை: சகலீசக்ரே யஸ்தம் வீரம் நமாம்யஹம் ।।**

திதியின் மகனும், கொடிய அரக்கனுமான இரண்யன், உலகத்தில் எவராலும் தனனை கொல்ல இயலாது என ஆணவத்துடன் திரிந்தான். அவனைத் தன் நகத்தால் கிழித்து எறிந்த வீரம் மிக்கவரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**பதா வஷ்டப்த பாதாளம் மூர்த்தா விஷ்ட த்ரிவிடபம் ।**
**புஜ ப்ரவிஷ்டாஷ்ட திசம் மஹா விஷ்ணும் நமாம்யஹம் ।।**

விஷ்ணு கீழுள்ள பாதாள உலகம் வரையுள்ள திருவடியை யும், மேலுள்ள தேவலோகம் வரையுள்ள திருமுடியையும்

கொண்டிருக்கிறார். அவரது கைகளும், தோள்களும், எட்டுத் திசைகளிலும் பரவியுள்ளன. விஸ்வரூபம் கொண்ட அந்த நரசிம்மரை நான் வணங்குகிறேன்.

**ஜ்யோதீம் ஷ்யர்கேந்து நக்ஷத்ர ஜ்வலநாதீந் யநுக்ரமாத்।**
**ஜ்வலந்தி தேஜஸா யஸ்ய தம் ஜ்வலந்தம் நமாம்யஹம்।।**

சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், அக்னி ஆகிய அனைத்தும் விஷ்ணுவிடம் இருந்து வெளிவரும் பிரகாசத்தைக் கொண்டே ஒளிவீசுகின்றன. இப்படிப்பட்ட தேஜஸ் (ஒளி) மிக்க விஷ்ணுவின் அவதாரமான நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**ஸர்வேந்த்ரியை ரபி விநா ஸர்வம் ஸர்வத்ர ஸர்வதா।**
**யோ ஜாநாதி நமாம் யாத்யம் தமஹம் ஸர்வதோமுகம்।।**

சகல இந்திரியங்கள், புலன்களின் உதவி இல்லாமல் எங்கும் நடக்கும் அனைத்து விஷயங்களையும் அறியும் பரம்பொருள் விஷ்ணு. எல்லாத் திசைகளிலும் பார்க்கும் சக்தி பெற்றிருப்பதால் ‘ஸர்வதோமுகம்’ என போற்றப்படும் சக்தியுடைய நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**நரவத் ஸிம்ஹவச் சைவ யஸ்ய ரூபம் மஹாத்மந।**
**மஹா ஸடம் மஹா தம்ஷ்ட்ரம் தம் ந்ருஸிம்ஹம் நமாம்யஹம்।।**

பக்தர்களுக்காக மனித வடிவமும், அசுரர்களை பயமுறுத்த சிங்க வடிவமுமாக வந்தவரே! பிடரி முடியும், கோரைப் பற்களும் ஒளி வீச அவதரித்த நரசிம்மரே! உம் அழகான வடிவத்தை நான் வணங்குகிறேன்.

**யந்நாம ஸ்மரணாத் பீதா பூத வேதாள ராக்ஷஸா:।**
**ரோகாத் யாஸ்ச ப்ரணச்யந்தி பீஷணம் தம் நமாம்யஹம்।।**

உன் திருநாமத்தை (பெயர்) சொல்லக்கூடி தேவையில்லாமல், 'நரசிம்மா' என்று மனதில் சிந்தித்த உடனேயே பூதம், வேதாளம், அசுரர் போன்றவர்களை நடுங்கச் செய்பவரே! தீராத நோயையும் தீர்ப்பவரே! எதிரிகளுக்கு பயம் உண்டாக்குபவரே! நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**ஸர்வோபி யம் ஸமார்ச்ரித்ய ஸகலம் பத்ர மச்நுதே ।**
**ச்ரியா ச பத்ரயா ஜுஷ்ட: யஸ் தம் பத்ரம் நமாம்யஹம் ।।**

அண்டினாலே எல்லா நன்மைகளும் அருள்பவரே! எல்லா நன்மையை அருள்வதால் 'பத்ரை' என்று பெயர் பெற்ற லட்சுமி தாயாரால் விரும்பப்படுபவரே! சிறப்பு மிக்க லட்சுமி நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**ஸாக்ஷாத் ஸ்வகாலே ஸம்ப்ராப்தம் ம்ருத்யும் சத்ரு கணாந்விதம் ।**
**பக்தாநாம் நாசயேத் யஸ்து ம்ருத்யோர் ம்ருத்யும் நமாம்யஹம் ।।**

மரண காலத்தில் எமதூதர்கள் வந்தால், அவர்களுக்கு தன் பக்தர்களின் மீது உரிமை இல்லை என்பதை உணர்த்துபவரும், அவர்களை வலிய வந்து காப்பவரும், தன் பக்தர்களின் பகைவர்களை அழிப்பவரும், மரணத்திற்கே மரணத்தை தருபவருமான நரசிம்மரே! உம்மை நான் வணங்குகிறேன்.

**நமஸ்காராத்மகம் யஸ்மை விதாய ஆத்ம நிவேதநம் ।**
**த்யக்தது கோகிலாந் காமாந் அச்நந்தம் தம் நமாம்யஹம் ।।**

எந்த கடவுளை அடைக்கலம் புகுந்து நம் ஆத்மாவை அர்ப்பணித்தால் வாழ்வில் எல்லா மேன்மைகளும் பெறுவோமோ, யாரிடம் அடைக்கலம் புகுந்தால் துன்பம் எல்லாம் நீங்குமோ, அந்த நரசிம்மரை வணங்குகிறேன்.

**தாஸபூதா: ஸ்வத ஸர்வே ஹ்யாத்மாந பரமாத்மந ।**
**அதோஹமபி தே தாஸ: இதிமத்வா நமாம்யஹம் ।।**

இந்த பூவுலகத்தில் மட்டும் இல்லாமல், அனைத்து உலகிலுள்ள உயிர்களும் உனக்கு அடிமையே ஆவர். அந்த முறையில் நானும் உனக்கு அடிமை ஆகிறேன். நரசிம்மரே! இந்த உண்மையை உணர்ந்து உம்மைச் சரணடைகிறேன்.

**சமங்கரேண ஆதராத் ப்ரோக்தம் பதாநாம் தத்வ நிர்ணயம் ।**
**த்ரிஸந்த்யம் ய: படேத் தஸ்ய ஸ்ரீர்வித் யாயுஸ்ச வர்த்ததே ।।**

ஜீவனாகிய நான், உள்ளத்தில் நரசிம்மனின் மீது கொண்ட அன்பினை சொற்களால் வெளிப்படுத்தினேன். இந்த ஸ்லோகங்களை காலை, மதியம், மாலை ஆகிய மூன்று வேளையிலும் பக்தியுடன் படிப்பவர்கள் அழகு, அறிவு, செல்வம், பக்தி ஆகியவை பெற்று வாழ்வர்.

**உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் ।**
**ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யோர் ம்ருத்யும் நமாம்யஹம் ।।**

கோபம், வீரம், ஒளி முகம் கொண்டவர் விஷ்ணு. எல்லா திசைகளிலும் பார்வை செலுத்துபவர் என்பதால் 'ஸர்வ தோமுகம்' எனப்படுகிறார். எதிரிக்கு பயத்தையும், மரணத்திற்கே மரணத்தையும், எல்லா நன்மையையும் தர வல்ல நரசிம்மரை வணங்குகிறேன்.

**ஸ்ரீமதே லட்சுமி நரஸிம்ஹ ப்ரஹ்மணே நம:।**
**ஓம் ஸ்ரீம் ஸ்ரீயை நம: ஓம் பூம் பூம்யை நம: ஓம் நீம் நீளாயை நம: ।।**

ஸ்ரீ லட்சுமி நரசிம்மர் என்ற மஹாதெய்வத்திற்கு நமஸ்காரம். மஹா தெய்வத்திற்கு நமஸ்காரம். லட்சுமி தாயாருக்கு நமஸ்காரம். பூமாதேவிக்கு நமஸ்காரம். நீளாதேவிக்கு நமஸ்காரம்.

# சூரிய காயத்ரி

பாஸ்கராய வித்மஹே மகத்: விதிகராய தீமஹி
தந்நோ ஆதித்யப் பிரசோதயாத்

# சூரியனின் பெயர்கள் 12

1. மித்ர - அனைவருக்குமான நண்பர்
2. ரவி - அனைவராலும் போற்றப்படுபவர்
3. சூர்யா - ஊக்கமளிப்பவர்
4. பானு - அழகூட்டுபவர்
5. சுகா - உணர்வுகளை வலிமையாக்குபவர்
6. பூஷன் - புத்துணர்ச்சி தருபவர்
7. ஹிரண்ய கர்ப்ப - ஆற்றல் திறமையை வளர்ப்பவர்
8. மரீசி - நோய்களை அழிப்பவர்
9. ஆதித்ய - கவர்ந்திழுப்பவர்
10. அர்க்க - வணக்கத்திற்குரியவர்
11. சவித்ரு - சிருஷ்டிப்பவர்
12. பாஸ்கர - ஒளி மிகுந்து பிரகாசிப்பவர்

---

# விநாயகனின் அறுபடைவீடு

1. திருவண்ணாமலை செந்தூரப் பிள்ளையார்
2. முகுகுன்றம் (விருத்தாசலம்) ஆழத்துப்பிள்ளையார்
3. திருக்கடவூர் கள்ளவாரணுப் பிள்ளையார்
4. மதுரை முக்குறுணிப் பிள்ளையார்
5. காசி துண்டீர விநாயகர்
6. திருநாறையூர் பொல்லாப் பிள்ளையார்

# பரிகார கோயில்கள் முகவரி, தொலைபேசி எண்கள்

## ஆயுள்பலம் கூட ...

1. அருள்மிகு ஸ்ரீலிவனேசுவரர் திருக்கோயில், திருப்பைஞ்ஞீலி, திருச்சி மாவட்டம் - 621 005. போன் : 0431-290 2654.
2. அருள்மிகு அமிர்தகடேஸ்வரர் திருக்கோயில், திருக்கடையூர், நாகை மாவட்டம் - 609 311. போன்: 04364-287 429.
3. அருள்மிகு வாஞ்சிநாத சுவாமி திருக்கோயில், ஸ்ரீவாஞ்சியம், நன்னிலம் வட்டம், திருவாரூர் மாவட்டம் - 610 105. போன் : 04366-228 305.
4. அருள்மிகு சித்திரகுப்த சுவாமி திருக்கோயில், நெல்லுக்காரதெரு, காஞ்சிபுரம் - 631 501. போன் : 044-2722 5875.
5. அருள்மிகு எமனேஸ்வரமுடையார் திருக்கோயில், எமனேஸ்வரம், பரமக்குடி, ராமநாதபுரம் மாவட்டம் - 623 701.
6. அருள்மிகு காலகாலேஸ்வரர் திருக்கோயில், கோயில்பாளையம், கோயமுத்தூர் மாவட்டம். போன் : 0422-265 4546.
7. அருள்மிகு தண்டீஸ்வரர் திருக்கோயில், வேளச்சேரி, சென்னை - 600 042. போன் : 044 - 2243 6121.

## ஆரோக்யம் சீராக ...

1. அருள்மிகு பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் திருக்கோயில், குணசீலம், திருச்சி மாவட்டம் - 621 204, போன்: 04326-275 210
2. அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயில், வைத்தீஸ்வரன் கோயில், நாகப்பட்டினம் மாவட்டம் - 609 117. போன்: 04363-279 423
3. அருள்மிகு பவஔஷதீஸ்வரர் திருக்கோயில், திருத்துறைப்பூண்டி, திருவாரூர் மாவட்டம் - 614 713. போன் : 04369 222 392

4. அருள்மிகு தன்வந்திரி திருக்கோயில், ராமநாதபுரம், கோவை மாவட்டம். போன் : 0422 231 3188
5. அருள்மிகு வைத்தியநாத சுவாமி திருக்கோயில், மடவார்விளாகம், ஸ்ரீவில்லிபுத்தூர், விருதுநகர் மாவட்டம். போன் : 04563 261 262
6. அருள்மிகு மருந்தீஸ்வரர் திருக்கோயில், திருவான்மியூர், சென்னை - 600 041. போன் : 044-2441 0477 marundeeswarartemple@gmail.com
7. அருள்மிகு மகா மாரியம்மன் திருக்கோயில், வலங்கைமான், திருவாரூர் மாவட்டம் - 612 804. போன் : 04374-264 575.

## திருமணத் தடைகள் நீங்க ...

1. அருள்மிகு நித்யகல்யாண பெருமாள் திருக்கோயில், திருவிடந்தை, காஞ்சிபுரம் மாவட்டம் - 603 112. போன்: 044-2747 2235
2. அருள்மிகு உத்வாகநாதசுவாமி திருக்கோயில், நாகப்பட்டினம் மாவட்டம் - 609 801. போன்: 04364-235 002. thirumanamkoil@gmail.com
3. அருள்மிகு கல்யாண பசுபதீஸ்வரர் திருக்கோயில், கரூர் மாவட்டம் - 639 001. போன் : 04324-262 010
4. அருள்மிகு கல்யாண வேங்கடரமணசுவாமி திருக்கோயில், தான்தோன்றிமலை, கரூர் மாவட்டம் - 639 001. போன் : 04324-257 531
5. அருள்மிகு பட்டீஸ்வரர் திருக்கோயில், பேரூர், கோயமுத்தூர் மாவட்டம் - 641 010. போன் : 0422-260 7991
6. அருள்மிகு வீழிநாதேஸ்வரர் திருக்கோயில் (மாப்பிள்ளை சுவாமியை வணங்க வேண்டும்), திருவீழிமிழலை, திருவாரூர் மாவட்டம் - 609 505. போன் : 04366-273 050.
7. அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோயில், நல்லாத்தூர் (பாடிச்சேரியிலிருந்து 18 கி.மீ.), கடலூர் மாவட்டம் - 605 106.
8. அருள்மிகு சென்னமல்லீஸ்வரர், சென்னகேசவபெருமாள் திருக் கோயில்கள், பாரிமுனை, சென்னை - 600 001 (சென்னை பாரிமுனை பூக்கடை காவல் நிலையத்திற்குப் பக்கத்தில்) போன் : 044-2535 3793.

## குழந்தைப்பேறு கிட்ட ...

1. அருள்மிகு முல்லைவனநாதசுவாமி மற்றும் கர்ப்பரட்சாம்பிகை திருக்கோயில், திருக்கருகாவூர், தஞ்சாவூர் மாவட்டம் - 614 302. போன்: 04374-273 423.
2. அருள்மிகு தாயுமானசுவாமி திருக்கோயில், மலைக்கோட்டை, திருச்சி மாவட்டம். போன் : 0461-270 4621.
3. அருள்மிகு சங்கரராமேஸ்வரர் திருக்கோயில், தூத்துக்குடி மாவட்டம். போன் : 0461-2320 6804.
4. அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில், காஞ்சிபுரம் மாவட்டம் - 631 502. போன் : 044-2722 2084. kanchiekambaranathar@gmail.com
5. அருள்மிகு விஜயராகவ பெருமாள் திருக்கோயில் (வறுத்த பயறு முளைக்க வைக்கும் தாயார்), திருப்புட்குழி, காஞ்சிபுரம் மாவட்டம் - 631 551. போன் : 044-2724 6501.
6. அருள்மிகு மாயூரநாதசுவாமி திருக்கோயில், பெத்தவநல்லூர், ராஜபாளையம், விருதுநகர் மாவட்டம். போன் : 04563-222 203.
7. அருள்மிகு பாலசுப்ரமணியசுவாமி திருக்கோயில் (இங்கே படிப்பாயச வழிபாடு சிறப்பு), ஆய்க்குடி (தென்காசியிலிருந்து 5 கி.மீ.) திருநெல்வேலி மாவட்டம் - 627 852.
8. அருள்மிகு நச்சாடை தவிர்த்தருளிய சுவாமி திருக்கோயில் தேவதானம் (ராஜபாளையத்திலிருந்து 12 கி.மீ.), விருதுநகர் மாவட்டம் - 626 121.
9. அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி திருக்கோயில், குமாரசாமி பேட்டை, தர்மபுரி மாவட்டம் - 636 701. போன் : 04342-266 616.

## கடன் பிரச்சனைகள் தீர ...

1. அருள்மிகு சாரபரமேஸ்வரர் திருக்கோயில் (இங்கே உள்ள ருணவிமோசனரை வழிபட வேண்டும்) திருச்சேறை, கும்பகோணம் தாலுகா, தஞ்சை மாவட்டம் - 612 605. போன்: 0435-246 8001.

2. அருள்மிகு திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருக்கோயில், திருமலை, ஆந்திரா - 517 504. போன் : 0877-277 777.
3. அருள்மிகு சிவலோக தியாகர் திருக்கோயில், நல்லூர் பெருமணம், கொள்ளிடம், ஆலக்குடி ரோடு, ஆச்சாள்புரம், சீர்காழி, நாகப்பட்டினம் மாவட்டம் - 609 101. போன்: 04364-277 800, 04364-278 272.
4. அருள்மிகு கருமாரியம்மன் திருக்கோயில் (இங்கே உள்ள மரச்சிலை கருமாரியம்மனை வணங்க வேண்டும்), திருவேற்காடு, சென்னை - 600 077. போன் : 044-2680 0430, 2680 0487.
5. அருள்மிகு அன்னமலை தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், (உணவுப்பஞ்சம் தீரும்) குந்தா, மஞ்சூர், ஊட்டி, நீலகிரி மாவட்டம். போன் : 0423-250 9353.

## செல்வ வளம் சேர ...

1. அருள்மிகு பக்தவத்சலப்பெருமாள் திருக்கோயில், திருநின்றவூர், திருவள்ளூர் மாவட்டம் - 602 024. போன்: 239 0434.
2. அருள்மிகு அஷ்டலட்சுமி திருக்கோயில், பெசன்ட்நகர், சென்னை - 600 090. போன் : 044-2491 7777, 2446 6777..
3. அருள்மிகு மாதவப்பெருமாள் திருக்கோயில், மயிலாப்பூர், சென்னை - 600 004. போன் : 044-2489 5112.
4. அருள்மிகு கைலாச திருக்கோயில், (கல்யாணம், குழந்தை வரமும் கிட்டும்) தாரமங்கலம், ஓமலூர், சேலம் மாவட்டம் - 636 502. போன் : 04290-252100.
5. அருள்மிகு அனந்தபத்மநாபசுவாமி திருக்கோயில், (திருமணத் தடையும் விலகும்) காந்தி நகர் இரண்டாவது பிரதான சாலை, அடையாறு. சென்னை - 600 020. போன்: 044-2441 3995, 2442 2529, 2442 1432.

# நோய் அகல ...

அருள்மிகு மருந்தீஸ்வரர் திருக்கோயில், திருவான்மியூர், சென்னை – 600 041. போன்:044-2441 0477.
marundeeswarartemple@gmail.com

அருள்மிகு வீழிநாதேஸ்வரர் திருக்கோயில் (திருவீழிநாதரை வணங்கினால் கண்நோய் தீரும்), திருவீழிமிழலை, திருவாரூர் மாவட்டம் - 609 505. போன் : 04366-273 050.

அருள்மிகு வீரராகவர் திருக்கோயில், திருவள்ளூர் மாவட்டம். போன் : 044-2766 0378.

அருள்மிகு பண்ணாரி மாரியம்மன் திருக்கோயில், பண்ணாரி (ஈரோடிலிருந்து 77 கி.மீ) ஈரோடு மாவட்டம் - 638 461. போன்: 04295-243 366, 243 442, 243 289.

அருள்மகு வைத்தியநாத சுவாமி திருக்கோயில் (வயிறு வலி நீங்கும், சுகப்பிரசவம் ஆகும்) மடவார்விளாகம், ஸ்ரீவில்லிபுத்தூர், விருதுநகர் மாவட்டம் - 626 125. போன்: 04563-261 262.

அருள்மிகு இருதயாலீஸ்வரர் திருக்கோயில், திருநின்றவூர், திருவள்ளூர் மாவட்டம் - 602 024.

அருள்மிகு தோரணமலை முருகன் திருக்கோயில் (மூலிகைகள் நிறைந்த மலை) தென்காசி-கடையம் வழி, தோரணமலை, திருநெல்வேலி மாவட்டம்.

# எதிரி பயம் விலக ...

1. அருள்மிகு காளிகாம்பாள் திருக்கோயில், தம்புச்செட்டித்தெரு, சென்னை - 600 001. போன் : 044-2522 9624, 2521 6246.
kalikambal.chn1@gmail.com

2. அருள்மிகு அங்காளபரமேஸ்வரி அம்மன் திருக்கோயில், ராயபுரம், சென்னை - 600 013. போன் : 044-2597 3112.

3. அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில், மேல்மலையனூர், விழுப்புரம் மாவட்டம். போன் : 04145-234 229, 234 291. angalammantemple@gmail.com

4. அருள்மிகு ரேணுகாம்பாள் திருக்கோயில், அகோ. படவேடு, வேலூர் மாவட்டம் - 606 905. போன் : 04181-248 424, 248 224. srirenukaparameswaritemple@gmail.com

5. அருள்மிகு தில்லைகாளியம்மன் திருக்கோயில், சிதம்பரம், கடலூர் மாவட்டம் - 608 002. போன் : 04144-230 251.

6. அருள்மிகு வெட்டுடையார் காளியம்மன் திருக்கோயில், அரியாக் குறிச்சி, சிவகங்கை மாவட்டம்-630 556. போன்:04575-232236, 202120.

7. அருள்மிகு மாசாணியம்மன் திருக்கோயில், ஆனைமலை, கோயமுத்தூர் மாவட்டம் - 642 104. போன்: 04253-282 337, 283 173.

8. அருள்மிகு பிரத்யங்கிராதேவி திருக்கோயில், அய்யாவாடி, தஞ்சாவூர் மாவட்டம் - 621 802. போன் : 0435-246 3414, 246 3144, 246 4452.

9. அருள்மிகு காளமேகப்பெருமாள் திருக்கோயில், திருமோகூர், மதுரை மாவட்டம் - 625 107. போன்: 0452-242 3444, 2423227.

10. அருள்மிகு தட்சிணகாசி உன்மத்த காலபைரவர் திருக்கோயில், அதியமான்கோட்டை, தர்மபுரி மாவட்டம் - 636 705.

11. அருள்மிகு காலபைரவர் திருக்கோயில், கல்லுக்குறிச்சி (கிருஷ்ண கிரியிலிருந்து 3 கி.மீ.) கிருஷ்ணகிரி மாவட்டம் - 635 001).

12. அருள்மிகு முனியப்பன் திருக்கோயில், பி. அக்ரஹாரம் (தர்மபுரி யிலிருந்து 22 கி.மீ.) தர்மபுரி மாவட்டம்.

## கல்வி வளம் பெருக ...

1. அருள்மிகு மகா சரஸ்வதி அம்மன் திருக்கோயில், கூத்தனூர் பூந்தோட்டம் அஞ்சல், நன்னிலம் தாலுகா, திருவாரூர் மாவட்டம் - 609 503. போன் : 04366-239 909.

